

# இவளுக்கு பொறாமையே

ஆம். பொறாமைப்படத்தான் செய்வாள் அவள்
அழகி, நவநாகரிகப் பெண். எல்லாவற்றிற்கும்
மேலாக அவள் தன் கணவனை வசப்படுத்தும்
ரகசியத்தைக் கண்டுபிடித்திருக்கிறாள். அந்த ரகசியம்
தான் என்ன? காலையிலிருந்து மாலை வரை வேலை
செய்து களைத்து வரும் கணவனை ஒரு கப்
நரஸஸ் காபி அளித்து திருப்தி செய்வதே.

**நரஸஸ்**

இந்திய தயாரிப்பில் தலை சிறந்தது

IN1TM.

# சுத்தம்

## ப்ரொட்யூசர் T.V.S. காஸ் பிளான்டின் முக்கிய அம்சம்




காஸ் பிளான்ட் அமைக்கப் பட்ட உங்கள் பஸ் அல்லது லாரி சுகமாக ஓட காஸ் சுத்தமாய் இருப்பது அவசியம். T. V. S. ப்ரொட்யூசர் காஸ் பிளான்ட் மற்றெல்லா தயாரிப்பையும்விட மிக சுத்தமான காஸை கொடுக்கிறது.

7000-க்கு மேற்பட்ட பிளான்டுகள் இந்தியாவில் விற்பனை ஆகி இருக்கின்றன.




**T.V. சுந்தரம் அய்யங்கார்**

அண் சன்ஸ், லிமிடெட்.

மதுரை & மதராஸ்

TVSK-15-TM

# R.I.A.F-க்கு நிர்வாக அதிகாரிகள் அவசியமாக தேவை

கமிஷென்ட் ஆபீசர்கள் அலுவலர்களுக்கு R.I.A.F. ஒரு புது கிளைஸ்தாபனத்தை ஏற்படுத்தியிருக்கிறது. இந்த கிளை உன்னத பயிற்சியையும் அனுபவத்தையும் கொடுக்கிறது. அதனால் அனேகர் சிவில் வாழ்க்கையில் வெற்றியடையத் தகுதியுள்ளவர்களாகிறார்கள். R.I.A.F. நிர்வாக அதிகாரிகள் இந்திய விமானிகளின் நிர்வாகம், நலன்களை கவனிக்கும் கமாண்டிங் ஆபீசர்களுக்கு உதவியளிக்கக் கூடிய பொறுப்புவாய்ந்த உத்தியோகத்தை செய்யவேண்டும். யுத்தத்திற்குப் பிறகு R.I.A.F. வேலை இல்லாதவர்களுக்கு சர்க்கார் உத்தியோகம் பெற நல்ல சந்தர்ப்பமுண்டு. ஏனெனில் சர்க்கார் தங்கள் ஆபீசுகளிலிருக்கும் அநேக வேலைகளை யுத்தத்தில் வேலை செய்தவர்களைக் கொண்டு பூர்த்தி செய்வதாக ஏற்றுக்கொண்டிருக்கின்றனர்.

**யோக்யதாம்சங்கள்**

படிப்பு: குறைந்தபக்ஷம் இந்திய சர்வகலாசாலையில் பட்டம் பெற்றவராக இருக்கவேண்டும். வயது 20-லிருந்து 38-க்குள். மெடிகல்: வியாதியில்லாமலும் மெடிகலாக தகுதியுள்ளவராயும் இருக்கவேண்டும். அந்தஸ்து. வேலைக்கு எடுத்துக்கொள்ளப் பட்டவர்கள் முதலில் 2-வது வகுப்பு ஏர்கிராப்ட்ஸ்மென்னாக பதிவு செய்துகொள்ளப்பட்டு ட்ரெயினிங்கிற்கு சேர்ந்ததும் ஆக்டிங் சார்ஜென்ட் (சம்பளம் கொடுக்கப்பட்டவர்) அந்தஸ்திற்கு உயர்த்தப் படுவார்கள். சம்பள விகிதம். ஆக்டிங் சார்ஜென்ட் (சம்பளம் கொடுக்கப்பட்டவர்) மாதம் ரூ. 115 பிளைட்சார்ஜென்ட் மாதம் ரூ.130 வாரண்ட் ஆபீசர் மாதம் ரூ. 200. அடையக்கூடிய சலுகைகள். எல்லா நிர்வாக அதிகாரிகளும் இலவசமாக ஆகாரம், உடுப்பு, இடவசதி, வைத்திய சிகிச்சை, பல் வைத்தியம் போதும் ராயல் இந்திய ஆகாயப் படையில் இருப்பவர்கள் அனுபவிக்கும் நலன்களையும், அலவன்ஸுகளையும் அடைகிறார்கள்.

**விண்ணப்பித்துக்கொள்ள வேண்டிய முறை**

சமீபத்திலுள்ள ரெக்ரூட்டிங் ஆபீசுக்கு விஜயம் செய்யுங்கள் அல்லது எழுதுங்கள். கீழே அவைகளின் ஜாபிதா கொடுக்கப்பட்டிருக்கிறது.

மதராஸ் : ... புதுப்பேட்டை லேன்ஸ், மவுண்ட் ரோடு போஸ்டு
பெங்களூர் : ... கப்பன் ரோடு.
திருச்சிறாப்பள்ளி: ... மதுரை ரோடு.
பெஜவாடா : ... பந்தர் ரோடு.
வேலூர் : ... 15, ஆபீஸர்ஸ் லேன்ஸ்.
மைசூர் : ... காந்தி ஸ்கொயர்.

AAA 1491 A

# சினிமா நட்சத்திரங்களைப் போல, நீங்களும் உங்கள் சருமத்தைக் காப்பாற்றுங்கள்!

## சாதனா போஸ்

என் சருமத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை நான் லக்ஸ் டாய்லட் சோப்பிடமே விட்டு விட்டேன் என்று நேத்திரமாய்ந்த அழகிய சாதனா சொல்லுகிறார். மணமுள்ள இந்த அழகிய சோப்பைத்தான் அவர் தவறாமல் உபயோகிக்கிறார். அதன் நுரையானது அவருடைய சருமத்தை மிருதுவாகவும், தூய்மையாகவும், கெடுதலில்லாமலும் வைத்துக் கொள்கிறது. அநேக அழகிய இந்திய சினிமா நட்சத்திரங்கள் தங்கள் சருமத்தை பாதுகாக்கும் பொருட்டு லக்ஸ் டாய்லட் சோப்பை நம்பியிருக்கிறார்கள்.




# லக்ஸ் டாய்லட் ஸோப்

LTS. 112-50-49 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED




அவைகள் பேச முடிந்தால் இம்மாதிரி சம்பாஷணை தான் நடக்கும். சுத்தமான ஆடைகள் அணிவோருக்கு ஒரு அலாதியான சுகத்தைத் தரும். அதற்கு ஏற்றது "காவேரி பார் ஸோப்தான்"

அழுக்கோ, பிசுக்கோ — எப்படியிருந்தாலும், அவைகளை நீக்கி, நீங்கள் ஆச்சரியப்படும்படி ஆடைகளை வெளுப்பது "காவேரி பார் ஸோப்"




THE RIGHT SOAP FOR GOOD CLOTHES

ஒரு மேட்டூர் கெமிகல் தயாரிப்பு

பூரண விற்பனை ஏஜண்டுகள் :

தி அல்லைடு இண்டஸ்ட்ரியல் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் லிமிடெட்,

120, அரமனைக்காரத் தெரு :: மதராஸ்

# நிகழ்ச்சிச் சித்திரம்

வெளிநாட்டு மூலதனம்

இந்தியக் கைத்தொழில்கள் வெளிநாட்டு முதலாளிகளின் கையில் சிக்கிக்கொண்டு விடலாம் என்று வைஸராய் நிர்வாக சபை அங்கத்தினரான ஸர் ஏ. டலால் திருவாய் மலர்கிறார்!

இந்தியக் கைத்தொழில்கள்

சோவியத் மேகம்

ஐரோப்பாவின் பழைய முதலாளித்துவ ஆட்சி முறையில் ஆசை கொண்ட பிற்போக்காளர்கள் ருஷ்ய சோவியத்தின் செல்வாக்கு திரண்டு வருவதைக் கண்டு மிரளுகிறார்கள்.

பொய்ப் பிரசாரம்

ஐரோப்பாவின் பிற்போக்காளர்

-உம்மன்










திருடன் போலீஸ்காரன் ஆனால்?









மலர் 4 } இதழ் 42 }

1945 மே 27

{ பார்த்திப ௵ { வைகாசி 14





சமீபத்தில் நடந்து முடிந்த ஐரோப்பிய யுத்தத்தில் ஒரு விசித்திரத்தைக் கண்டோம். அதாவது யுத்தத்தில் கலந்து சண்டை போட்ட நாடுகளைவிட யுத்தத்தில் கலக்காமல் நடுநிலைமை வகித்த நாடுகள் பெரும் திண்டாட்டத்தில் அகப்பட்டு விழித்தன! யுத்தத்தில் கலந்துகொண்ட நாடுகளுக்கோ ஒரு எதிரிதான். ஒரு பக்கத்தில் தான் இடி. ஆனால் நடுநிலைமை வகிக்கும் நாடுகளுக்கோ இரண்டு பக்கத்திலும் இடி. சண்டை போட்டுக்கொண்டிருக்கும் இரண்டு கட்சியினரும் அவர்களுக்கு எதிரிகள்.




இந்தமாதிரி தத்தளித்த நடுநிலைமை நாடுகளில் ஒன்று தான் அயர்லாந்து. அந்த நாட்டின் தலைவரான டிவாலராவின் பெயர், சென்ற வாரத்தில் திடீரென்று உலகப் பிரசித்தியின் உச்சத்தை அடைந்தது.

பிரதம மந்திரி சர்ச்சில் தமது ரேடியோப் பிரசங்கத்தில் டிவாலராவை ஒரு பலமான தாக்குத் தாக்கினார். அதனால் டிவாலராவின் பெயர் பிரசித்தியடைந்தது. பிறகு அதற்கு டிவாலரா பதில் சொன்னார். அதனால் அவர் பெயர் பிரசித்தியின் உச்சத்தையடைந்தது.

"அயர்லாந்தின் நடுநிலைமையை ஆக்ரமிப்பதற்கு பிரிட்டனுக்கு எத்தனையோ தடவைகள் அவசியம் ஏற்பட்டது; ஆயினும் பொறுத்திருந்தோம்!" என்று சர்ச்சில் சொன்னதற்கு, டிவாலரா, "பெரிய நாடுகளின் அவசியமே பெரிது. அதுவே நியாயம் — என்கிற இந்தச் சர்ச்சில் கொள்கையினால்தான் முதல் உலக யுத்தம் நடந்தது; இப்பொழுது இரண்டாவது உலக யுத்தம் நடந்தது; இனி மூன்றாவது உலகயுத்தம் நடக்கப் போகிறது" என்று சுடச் சுடப் பதில் அளித்தார்.

ஏற்கெனவே உத்தம தேச பக்தர் என்றும், சிறந்த இராஜதந்திரி என்றும் பெயர் வாங்கியிருந்த டிவாலரா இந்த விவாதத்தின் மூலம் "உலகத்து மகா மேதாவி"களில் ஒருவர் ஆகி விட்டார்.

இந்த யுத்தம் ஆரம்பமான போது அயர்லாந்து பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக் குட்பட்ட நாடாக இருந்தது. கிடைத்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி இந்த ஆறு வருஷத்தில் அயர்லாந்தைப் பூர்ண சுதந்திர நாடாகப் பண்ணிய பெருமை டிவாலராவையே சேரும்.




மலர் 4 | தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 42

# என்ன சேதி?

## செவிடன் காதில்......

சென்னை அட்வைஸரி கவர்ன்மெண்டார் நமது சென்னை மாகாணத்து விவசாயிகளிடம் பணம் ஏராளமாகக் குவிந்து வருவதை எப்படியோ தெரிந்து கொண்டு, விவசாய வருமான வரி என்பதாக ஒரு புது வரி போட உத்தேசித்திருக்கிறார்கள் அல்லவா? அதைப் பற்றி நாம் இத்தனை காலமும் அபிப்பிராயம் எழுதவில்லை. காரணம் என்னவென்றால், அப்படி எழுதும் அபிப்பிராயத்தை வீண் என்றும், அதற்காகச் செலவழியும் காகிதம், மை, அதைப் படிக்க நேயர்கள் செலவழிக்கும் நேரம் எல்லாம் விருதா என்பதாகவும் நாம் எண்ணியிருந்ததுதான். "சென்னை அட்வைஸரி சர்க்கார் எப்போது தீர்மானித்து விட்டார்களோ அது தீர்மானித்ததுதானே, நாம் சொல்லும் அபிப்பிராயம் எங்கே ஏறப் போகிறது!" என்று கருதினோம். ஆனால் சென்னை சர்க்கார் சென்ற வாரத்தில் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார்கள். அதில், விவசாய வருமான வரியைப் பற்றி அபிப்பிராயம் சொல்கிறவர்கள் மே மாதம் 31உக்குள் சொல்லலாம் என்று தெரியப்படுத்தியிருக்கிறார்கள். எனவே, ஒரு வேளை செவிடன் காதில் சங்கு ஊதினாலும் ஏறலாம் என்ற ஆசையுடன் நமது அபிப்பிராயத்தை இதோ சொல்லி வைக்கிறோம்.

## சங்கை ஊதுகிறோம்!

விவசாய வருமான வரியைப் பற்றி நமது அடிப்படையான அபிப்பிராயம் என்னவென்றால்,

(1) எல்லாவற்றுக்கும் முதலில், இம் மாகாணத்தில் இப்போதுள்ள நில வரியை உடனே அடியோடு எடுத்து விட வேண்டும் என்பதுதான்.

முதலில் இதைச் செய்து விட்டுத்தான் மற்றப்படி விவசாய வருமான வரியைப் பற்றி யோசிக்க வேண்டும்.

2. வருஷம் ஒன்றுக்கு ரூ. 500-க்குள் விவசாய வருமானம் உள்ள குடித்தனக்காரர்களுக்கு எல்லாம் நிலவரி—விவசாய வரி—ஒன்றுமே விதிக்கக் கூடாது.

அதாவது ஒரு குடும்பத்துக்கு ஒரு வருஷத்துக்கு வேண்டிய உணவுப் பொருளைச் சர்க்காருக்கு வரி கொடுக்காமல் விளைவித்துக் கொள்ள விவசாயிகளுக்கு உரிமை வேண்டும்.

3. 500 ரூபாய்க்கு மேல் ஆயிரம் ரூபாய்க்குள் விவசாய வருமானம் உள்ளவர்களுக்கு இப்போது விதிக்கப்படும் நிலவரியில் பாதி விதிக்கப்பட வேண்டும்.

4. ஆயிரம் ரூபாய்க்கு மேலே விவசாய வருமானம் உள்ளவர்களுக்குப் படிப்படியாக உயர்த்திக் கொண்டு போய், ஐம்பதினாயிரத்துக்கு மேற்பட்ட வருமானங்களுக்கு முக்கால் பங்கு வரையில் வரி போட வேண்டும்.

இப்படி வரி வசூல் திட்டம் ஒருபுறமிருக்க, சென்ற வருஷத்தைவிட இந்த வருஷம் அதிகமாக விவசாயப் பொருள்கள் உற்பத்தி செய்கிறவர்களுக்கு சர்க்கார் கஜானாவிலிருந்து நன்கொடை அளிக்கவேண்டும்!

சின்னக் குடியானவன், பெரிய மிராசுதார், லச்சுவான்தார், ஜமீன்தார்,—யாராயிருந்தாலும் விவசாயத்தை விருத்தி செய்கிறவர்களைத் தேசத்துக்குப் பரம உபகாரம் செய்கிறவர்களாய்க் கருதி அவர்களைக் கௌரவப்படுத்த வேண்டும்.

இவைதான் நம் யோசனைகள். ஊதுகிற சங்கை ஊதியாகி விட்டது! இனிமேல் சர்க்கார் பாடு, செவிடன் பாடு!

# பர்மாவுக்கு விபூதி

"பர்மாவுக்குப் பட்டை நாமம்" என்று சொன்னால், மோனைப் பொருத்தம் இருக்கும்; விஷயமும் பளிச் சென்று விளங்கும். எனினும், சில வைஷ்ணவ நண்பர்கள் 'நாமம் போடுதல்' என்னும் சொற்றொடரை ஆட்சேபிக்கிறார்கள்.

முன்னொரு தடவை மேற்படி சொற்றொடரை நாம் உபயோகித்த போது, அச் சொற்றொடர் எப்படித் திரிந்து வந்தது என்பதை ஒரு வைஷ்ணவ நண்பர் நமக்குத் தெரியப்படுத்தியிருந்தார்.

அதாவது முற்காலத்தில் தமிழ் நாட்டில் ஒருவன் கடன் வாங்கித் திருப்பிக் கொடுக்காமல் ஏமாற்றி விட்டால், "தெரு மண்ணைப் போட்டான்!" என்று சொல்வது வழக்கமாயிருந்ததாம். 'தெரு மண்' என்பது, நாளடைவில் 'திரு மண்' என்று திரிந்ததாம். 'திருமண்'ணை மொழி பெயர்த்து, "நாமம் போட்டான்!" என்று சொல்ல ஆரம்பித்து விட்டார்களாம். ஆகையால், "அந்தப் பிசகான சொற்றொடரை இனிமேல் உபயோகிக்க வேண்டாம்" என்று அந்த வைஷ்ணவ நண்பர் நமக்கு எழுதியிருந்தார்.

சென்ற இதழுக்கு முன் இதழில் பிரிஸ்கோ மகாநாட்டுக் கட்டுரையில் மறுபடியும் நாமம் நுழைந்து விட்டது. எனவே, இன்னொரு வைஷ்ணவ நண்பர் வெகு வெகு கோபமாக நமக்கு எழுதியிருக்கிறார். "எதையாவது போட்டுத்தான் ஆகவேண்டுமென்றால், விபூதியைப் போடுங்களேன்! எதற்காக நாமத்தையே போடுகிறீர்கள்?" என்று அவர் கேட்டிருக்கிறார்.

அவரைத் திருப்தி செய்வதற்காகவே பர்மாவுக்கு நாம் விபூதியைப் போடுகிறோம். மூன்று பட்டையாக விபூதியைக் குழைத்துப் போடுகிறோம். அதாவது நாம் போடவில்லை! பிரிட்டிஷ் சர்க்கார் போட்டு விட்டதைத்தான் எடுத்துக் காட்டுகிறோம்!

* * *

பர்மா ஜப்பானியரின் ஆதிக்யத்தில் இருந்த காலத்தில் பிரிட்டிஷ் பத்திரிகைகள் அடிக்கடி, "மறுபடியும் பர்மாவைப் பிடித்ததும் அந்த நாட்டுக்குச் சுயாட்சி கொடுத்தே ஆகவேண்டும்!" என்று எழுதிக் கொண்டிருந்தன. பிரிட்டிஷ் அரசியல் வாதிகள் பேசிக் கொண்டிருந்தார்கள். "ஜப்பானியர் பர்மாவுக்குச் சுயராஜ்யம் கொடுப்பதாக ஆசை வார்த்தை சொல்வார்கள்; அதை நம்ப வேண்டாம்! ஜப்பானியர் யுத்தம் நடக்கும் வரையில் இப்படிச் சொல்லிக் கொண்டிருந்து கடைசியில் ஏமாற்றி விடுவார்கள்!' என்று பர்மியருக்கு அடிக்கடி எச்சரிக்கை செய்யப்பட்டு வந்தது.

ஆனால், ஜப்பானியருக்கு அத்தகைய சந்தர்ப்பம் கிட்டவில்லை. அதாவது யுத்தம் முடிந்த பிறகு பர்மியருக்குச் சுதந்திரம் கொடுக்காமல் ஏமாற்றும் படியான சந்தர்ப்பம் ஜப்பானியருக்குக் கிட்டவில்லை. யுத்தம் முடிவதற்குள்ளே அவர்கள் பர்மாவில் தோல்வியடைந்து அந்நாட்டைக் காலி செய்து விட்டுப் போய்விட நேர்ந்தது.

எனவே, பர்மாவுக்குப் பட்டை நாமத்தையோ, அல்லது விபூதிப் பட்டையையோ போடும் தனிப்பெருமை பாக்கியமானது கடைசியில் நமது பழைய பெயர் பெற்ற பிரிட்டனுக்குத்தான் கிடைத்தது!

* * *

மேற்கண்ட வைபவத்தை நாம் ஒருவாறு எதிர்பார்த்துத்தான் வந்தோம் என்று குறிப்பிடக் கடமைப் பட்டிருக்கிறோம். "அக்யாப் பிடிபட்டது; மாந்தலே கைப்பற்றப்பட்டது; ரங்கூன் விழுந்தது!" என்றெல்லாம் செய்தி வரவர, இதற்கெல்லாம் முடிவில் வரப்போகும் பட்டாபிஷேக வைபவத்தை நாம் பரபரப்புடன் எதிர்பார்த்துக் கொண்டுதான் இருந்தோம். அதன்படியே வந்து விட்டது வைபவம்! — பட்டாபிஷேக வைபவம் அல்ல; பட்டை போடும் வைபவம்!

* * *

சென்ற வாரத்தில், பர்மாவுக்கு பிரிட்டிஷ் மந்திரி சபை மனம் உவந்து அளித்திருக்கும் அரசியல் திட்டம் வெளியாகியிருக்கிறது.

திட்டமாவது திட்டம்! அதைக் கேட்டவுடனேயே பர்மிய ஜனங்கள் ஆனந்தக் கடலில் விழுந்து தத்தளிக்கத் தொடங்கி விடுவார்கள்!

அவ்வளவு பிரமாதமான திட்டம்!

அந்தத் திட்டத்தின் முக்கியமான மூன்று அம்சங்களைக் கேளுங்கள் :—

(1) இன்னும் மூன்று வருஷ காலத்துக்கு பர்மாவானது கவலை யென்பது அணுவளவேனும் இல்லாமல் இருக்கலாம். ஏனெனில் 1948-ம் வருஷம் வரையில், பர்மாவில் கவர்னர் பெருமானின் தனியாட்சி விமரிசையாக நடைபெற்றுவரும். ஜப்பானோ, அல்லது ஜனநாயகமோ, அல்லது இது போன்ற வேறு விபத்தோ பர்மாவுக்குள் தலைகாட்ட முடியாது.

(2) 1918-ம் ஆண்டுக்குப் பிறகு, பர்மாவில் ஜனநாயகம் தலை காட்டும். அதாவது 1941-ல் இருந்தபடி தேர்தல்—சட்டசபை முதலியன ஏற்படும். இப்படி ஏற்படும் அரைகுறைப் பிரதிநிதித்வ ஆட்சியானது கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து, வருங்காலத்தில் எப்போதாவது, அதற்கு எப்போது இஷ்டமோ அப்போது பூரண குடியேற்ற நாட்டு ஆட்சியாக மாறும்.

பர்மாவின் முடிவான தலையெழுத்து மேற்படி குடியேற்ற நாட்டு ஆட்சியே தவிர, பூரண சுதந்திரமோ அல்லது பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலிருந்து பிரிந்துபோகும் உரிமையோ, அல்ல! இந்தமாதிரியான விபரீதம் எதுவும் பர்மாவுக்கு எக்காலத்திலும் நேராது. அதாவது பிரிட்டிஷார் அளித்திருக்கும் அரசியல் திட்டத்தின்படி கிடையவே கிடையாது.

(3) அப்படிப்பட்ட எந்தக் காலத்திலே ஏற்படப்போகிற குடியேற்ற நாட்டு ஆட்சிக்குக் கூடப் பர்மாவில் சில பகுதிகளுக்குத்தான் உரிமை உண்டு. வேறு சில பகுதிகள்—நாகரிக மற்ற ஜனங்கள் வசிக்கும் பகுதிகள்—இருக்கின்றன. வாயில்லாப் பூச்சிகளாகிய அந்த ஏழை ஜனங்களை ஜனநாயகம், சுதந்திரம் முதலிய பிசாசுகளிடம் காட்டிக் கொடுக்க முடியாது. அப்பேர்ப்பட்ட ஜனங்கள் வசிக்கும் பகுதிகளை எப்போதும் பிரிட்டிஷ் சர்க்கார் தங்களுடைய சொந்தப் பொறுப்பில்—சொந்த ஆதிக்கத்திலேயே வைத்துக்கொண்டு, என்றென்றைக்கும் கண்ணும் கருத்துமாய்க் கவனித்து வருவார்கள்!

தற்கால உலகத்து அரசியல் நிகழ்ச்சிகளில் இதைப் போன்ற ஒரு அநீதியை உதாரணத்துக்கு எடுத்துக் காட்டுவது அசாத்தியம்.

யுத்தத்துக்கு முந்தி பர்மாவில் ஒரு வகையான ஜனப் பிரதிநிதி ஆட்சி நடந்துவந்தது. நமது மாகாணங்களில் நடந்தது போன்ற மந்திரி சபை ஆட்சி நிலைபெற்றிருந்தது.

ஆனால் இன்னும் மூன்று வருஷத்துக்கு அம்மாதிரி மந்திரி சபை கூட பர்மாவில் ஏற்படாது.

பர்மா அப்படி என்ன பாவத்தைச் செய்தது?

ஜப்பானியரின் ஆக்ரமிப்புக்கு பர்மா உட்பட்டது அதன் குற்றமா?

அப்படியானால், ஐரோப்பாவில் போலந்தும் செக்கோஸ்லோவேகியாவும் ஜுகோஸ்லாவியாவும் ஆஸ்திரியாவும் அதேவிதமான குற்றத்தை—அதாவது ஜெர்மனிக்கு உட்பட்டிருந்த குற்றத்தை—செய்திருக்கின்றன.

மேற்படி தேசங்கள் எல்லாம் ருஷியப் படைகளினாலேயே ஜெர்மன் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற்றன.

ஆகையால் இன்னும் மூன்று வருஷத்துக்கு மேற்படி தேசங்களை யெல்லாம் ருஷிய கவர்னர்கள்தான் ஆளவேண்டும் என்று சொன்னால், பிரிட்டன் அதைப் பொறுக்குமா! பிரிட்டிஷ் மந்திரிகள் "கூ! கூ! அநியாயம்!" என்று அலறமாட்டார்களா?

போலந்தை ருஷியா ஜெயித்தவுடனே, அங்கே போலிஷ்காரர்களைக் கொண்ட அரசாங்கம் ஒன்றை ஸ்தாபித்தது.

"அது சரியான பிரதிநிதித்வம் வாய்ந்த ஜனநாயக அரசாங்கம் அல்ல" என்பதாகவும், போலந்தில் ருஷிய யதேச்சாதிகார ஆட்சி நடப்பதாகவும் பிரிட்டிஷார் ஏக அமர்க்களம் செய்கிறார்கள்!

அப்படியிருக்க, பர்மாவில் மட்டும் ஜனநாயகம், பிரதிநிதித்வம் என்னும் வாசனைகூட இல்லாத கலப்பற்ற கவர்னர் யதேச்சாதிகார ஆட்சியை ஏன் இன்னும் மூன்று வருஷத்துக்கு ஏற்படுத்த வேண்டும்!

பிலிப்பைன் தலைநகரத்தை அமெரிக்கர்கள் ஜயித்தவுடனே, சிவில் ஆட்சியை உடனே ஜனப் பிரதிநிதிகளிடம் கொடுத்தார்கள். பிலிப்பைனை முழுதும் ஜயித்தவுடனே பூரண சுதந்திரம் கொடுத்து விடுவதாக மீண்டும் வற்புறுத்திச் சொல்லியிருக்கிறார்கள்.

ஆனால், பிரிட்டிஷாரோ, பர்மாவின் தலைநகராகிய ரங்கூனைப் பிடித்தவுடன், பர்மாவின் அரசாட்சியைப் பனிச் சென்று பிரிட்டிஷ் கவர்னரிடம் கொடுக்கிறார்கள்!

இந்த அநியாயம் அடுக்குமா? இந்த அக்கிரமம் சகிக்குமா?

உலகத்தீரே! அமெரிக்கர்களே! ருஷியர்களே! சீனர்களே! ஸான் பிரான்ஸிஸ்கோவில் கூடியிருக்கும் சர்வ தேசப் பிரதிநிதிகளே! எல்லோரும் கேளுங்கள்! இந்தமாதிரி அநியாயம் அக்ரமம் எங்கேயாவது உண்டா? உங்கள் முன்னிலையில் இப்படியும் நடக்கலாமா? ஏன் மௌனமாயிருக்கிறீர்கள்! பதில் சொல்லுங்கள்!

* * *

துரதிர்ஷ்ட பர்மாவின் விஷயத்தில் நமது கடமையைப் பரிபூரணமாக நிறைவேற்றி விட்டபடியால், இனிமேல் நம்முடைய சொந்த துரதிர்ஷ்டத்தைக் கவனிப்போம்.

பர்மாவின் நெற்றியில் பிரிட்டிஷார் இட்டிய விபூதிப் பட்டையிலிருந்து நாம் தெரிந்து கொள்ளக்கூடியது ஏதாவது இருக்கிறதா?

ஆகா! பேஷாக இருக்கிறது.

பர்மா ஆசியல் திட்டத்தின் இலட்சணத்தைப் பார்த்து, பிரிட்டிஷாரின் தற்போதைய மனோநிலை என்ன என்பதை நாம் தெரிந்து கொள்ளலாம்.

"பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைக் கலைத்து விடுவதற்காக நான் பிரதம மந்திரியாக ஆகவில்லை!" என்று மகானுபாவர் சர்ச்சில் அன்றைக்குச் சொன்னாரே, அந்த மனோநிலைதான் இன்றைக்கு இன்னும் அழுத்தமாய் வேரூன்றி இருக்கிறது என்பதை நாம் தெரிந்து கொள்ளலாம்.

பிரிட்டிஷார் இந்தியாவுக்குச் சுயராஜ்யம் கொடுக்கவும் காங்கிரஸ் தலைவர்களுடன் எப்படியாவது ராஜிசெய்து கொள்ளவும் துடியாய்த் துடித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று நம்புவது எத்தனை பெரிய மடமை என்று தெரிந்து கொள்ளலாம்.

பர்மாவுக்கு அவர்கள் போட்ட நாமத்தையோ விபூதியையோதான் இந்தியாவுக்கும் குழைத்துப்போட முயற்சிப்பார்கள் என்று தெரிந்து கொள்ளலாம்.

அப்படி அவர்கள் போட முயற்சிப்பார்களே என்பதற்காக நமக்கு நாமே முன்னாலேயே பட்டை குழைத்துப் போட்டுக்கொள்வது பெரும் பிசகு என்பதையும் தெரிந்துகொள்ளலாம்.

ஏற்கெனவே நாம் மாகாண மந்திரி சபைகளை விட்டதிலும், கிரிப்ஸ் திட்டத்தை நிராகரித்ததினால், பிரிட்டிஷாருக்கு எவ்வித நஷ்டமும் இல்லையென்பதையும், நம்மை நாமேதான் ஏமாற்றிக் கொண்டோம் என்பதையும் நினைவு படுத்திக் கொள்ளலாம்.

அப்படி நினைவு படுத்திக்கொண்டு, இனிமேல் வரக்கூடிய சந்தர்ப்பத்தை ஒரு நாளும் கைவிடுவதில்லையென்று தீர்மானித்துக் கொள்ளலாம்.

'பதவி ஏற்பு' என்றும் 'உத்தியோக மோகம்' என்றும் பொருத்தமில்லாமல் பிதற்றிக் கொண்டிராமல், கையில் கிடைக்கும் அரசாங்க அதிகாரத்தைக் கைப்பற்றுவதென்று தீர்மானிக்கலாம்.

யுத்தத்துக்கு முன் முக்கால் சுயராஜ்யமாயிருந்த அயர்லாந்தின் அரசியலை விடாமல் வைத்துக்கொண்டு, அதையே யுத்தத்தின் போது சமயோசித சாமர்த்தியத்தினால் பூரண முழு சுயராஜ்யமாகச் செய்து கொண்ட டிவலராவின் உதாரணத்தைப் பார்த்தாவது, நாம் செய்ய வேண்டியது என்ன என்று தீர்மானிக்கலாம்.

## மாம்பலம் கோயில்

நூறொரு சங்கீத சபையும் பொழுதொரு நாட்டிய மண்டலியும் தோன்றிக் கொண்டிருக்கும் இந்த நாளில் எம். எஸ். எஸ். சபா என்றதும், "அது எங்கே கிளம்பியிருக்கிறது, இந்தப் புதிய சங்கீத சபை?" என்றுதான் கேட்கத் தோன்றும். ஆனால், இந்தச் சபையில் சங்கீதமோ, நாட்டியமோ, நாடகமோ ஒன்றும் கிடையாது. மாம்பலத்திலுள்ள சில ஆஸ்திகர்கள் கூடி மேற்படி சபையை ஆரம்பித்து வெகு காலமாய் நடத்தி வருகிறார்கள்.

'மாம்பலம் சன்மார்க்க சம்வர்த்தினி சபை' என்பதுதான் எம். எஸ். எஸ். சபை. மேற்படி சபைக்காரர்கள் ஒன்றுகூடி ஏழெட்டு வருஷங்களுக்கு முன்பாக மாம்பலம் பஸ் டர்மினஸுக்குப் பக்கத்தில் ஒரு பிள்ளையார் கோயிலைக் கட்ட ஆரம்பித்தனர். சில தனிப்பட்ட நபர்களின் முயற்சியாலும் விநாயகக் கடவுளின் அருளினாலும் மேற்படி கோயிலில் வருஷா வருஷம் இட நெருக்கடி ஏற்பட ஆரம்பித்தது. முதலில் அந்தக் கோயிலில் பிள்ளையார் எழுந்தருளினார். பின்னர் அவர் தம்பி சுப்பிரமணியக் கடவுள் குடியேறினார். அப்புறம் அவர்களைத் தேடி பார்வதி பரமேசுவரரும், மகாவிஷ்ணு, அநுமான் எல்லோரும் வந்து சேர்ந்தார்கள். மாம்பலத்தில்தான் இட நெருக்கடி என்றால் மாம்பலம் கோயிலிலும் இட நெருக்கடி ஏற்பட்டு ஒரே தத்தளிப்பாயிருக்கிறது!

இப்படியாக, சைவ வைஷ்ணவ ஒற்றுமையுடன் விளங்கும் மேற்படி தேவாலயத்துக்கு வருகிற ஆனி ௴ 8உ மகா கும்பாபிஷேகம் நடக்கப்போகிறது. இந்தச் சமரச தெய்வத் திருப்பணிக்கு எல்லோரும் இயன்ற அளவு பொருளுதவி செய்து பகவத் கடாட்சத்திற்குப் பாத்திரர்களாகும்படி கேட்டுக்கொள்கிறோம். கும்பாபிஷேகத்துக்கு நன்கொடை அனுப்புகிறவர்கள் கீழ்க்கண்ட விலாசத்துக்கு அனுப்பி வைக்கவும்: காரியதரிசி, மாம்பலம் சன்மார்க்க சம்வர்த்தினி சபா, தியாகராய நகர், சென்னை.



மதுரையில்

# மதுரை காலேஜ் நிதிக்காக

ஸ்ரீமதி

## எம். எஸ். சுப்புலக்ஷ்மி

உதவும்

## சங்கீதக் கச்சேரி



29-6-45 வெள்ளிக்கிழமை

மாலை 7-மணிக்கு

## மதுரை

## சிந்தாமணி டாக்கீஸில்

டிக்கெட்டுகள்:

ரூ. 250/- 100/- 25/- 10/- 5/-

மதுரையில் கீழ்க்கண்ட இடங்களில் டிக்கெட்டுகள் கிடைக்கும்.

- மதுரை காலேஜ் ஆபீஸ்
- சிந்தாமணி டாக்கீஸ், கீழவெளி வீதி
- ராயல் டாக்கீஸ், தெற்குமாசி வீதி
- காலிக்கார் & கோ, பாலஸ் ரோடு



எட்டயபுரம்

## பாரதி ஞாபகார்த்த நிலையம்

### அஸ்திவார விழா

நாளது வைகாசி மீ 21உ (ஜுன் 3உ) ஞாயிற்றுக்கிழமை காலை 7 மணிக்கு, மகாகவி பாரதியாரின் ஜனன ஸ்தலமாகிய எட்டயபுரத்தில், தமிழ்ப் பெருமக்களின் பொருளுதவியினால் கட்டப் பெறும் பாரதி ஞாபகார்த்த நிலையத்துக்கு அஸ்திவார விழா நடைபெறும். ஸ்ரீ சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் அஸ்திவாரக் கல் நாட்டுவார்கள்.

மேற்படி வைபவத்துக்கு ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார், டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், டாக்டர் சுப்பராயன், நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை முதலிய தமிழ்நாட்டுப் பிரமுகர்கள் விஜயம் செய்வார்கள்.

வைபவத்துக்கு முந்தின தினமும் வைபவத்தன்றும் (ஜுன் மீ 2உ 3உ களில்) மேற்படி நிலையத்தின் அஸ்திவார விழாப் பந்தலில் பின்வரும் சங்கீத வித்வான்கள் கச்சேரி செய்ய இசைந்திருக்கிறார்கள்:—

கான கலாதரர் மதுரை மணி ஐயர், கான சரஸ்வதி ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள், தஞ்சாவூர் ஸ்ரீ லக்ஷ்மி நாராயணய்யர், ஸ்ரீ பி. எஸ். வேதாசலம் செட்டியார், ஸ்ரீ டி. கே. ரங்காச்சாரி

மேற்படி கச்சேரி கைங்கரியத்தில் தக்க பக்க வாத்திய வித்வான்களும் கலந்து கொள்வார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

தமிழன்பர்கள் மேற்படி வைபவத்துக்குத் திரளாக விஜயம் செய்து சிறப்பிக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.

பாரதி இலக்கிய மன்றத்தார்,
எட்டயபுரம்.

குறிப்பு:—எட்டயபுரம், கோவில்பட்டி ரயில்வே ஸ்டேஷனிலிருந்து ஏழு மைல்.




## சிக்கனப்படுத்துவதால் லாபமுண்டு !

உங்களுக்கு ஒவ்வொரு தேவையையும் குறைத்துக் கொள்ளுவதால் கையில் பணம் மிச்சமாகிறது. வாரக் கணக்காகவும் மாதக் கணக்காகவும் இப்படிச் செய்வதால் இந்தச் சிறு சிறு சேமிப்புக்கள் எவ்வளவு பெருந்தொகை யாகிறது !

தேவைப் பொருள்களுக்கு ஏற்பட்டிருக்கும் நெருக்கடியாலும் ஏழைகளின் தேவைகளை உத்தேசித்தும், இப்போது நீங்கள் சிக்கனத்தைக் கையாளுவது உங்கள் கடமை. இந்த அவசியமான நிலைமையை ஒரு உயர்ந்த சிறப்பாகக் கொண்டு காரியங்களை செய்வதன் மூலம் நீங்கள் உங்கள் நாட்டிற்கும் உங்களுக்கும் பண உதவி செய்து கொண்டவர்களாவீர்கள்.



**பொருட்களை மிதமாகச் செலவிட்டு அவை, தாராளமாகக் கிடைக்கும்படிச் செய்யுங்கள்**



கிழிந்த துணிகள், படுக்கை விரிப்புக்கள், மேஜை விரிப்புக்கள் ஆகியவற்றையும் இழை ஓட்டி நெடு நாட்கள் உழைக்கச் செய்யுங்கள்.



பழைய ஷர்ட், [illegible], பைஜாமா, வேஷ்டி எல்லாவற்றிற்கும் ஒட்டுப்போடுங்கள். புதியவற்றை வாங்காதீர்கள்.



தாயார் தகப்பனாரின் பழைய துணிகளிலிருந்து குழந்தைகளுக்குத் துணிகளைத் தைத்துக் கொள்ளுங்கள். அவைகள் கெட்டவைகளாகத் தெரியமாட்டா.



பழைய ஜோடுகளை ஒட்டுப் போட்டுத் தைக்கும்படி அனுப்புங்கள். அவைகளை எறியாதீர்கள்.



புதுக் குடைகள் வாங்காதீர்கள். உங்கள் பழைய குடையைப் பழுதுபார்த்துக் கொள்ளுங்கள்.



பழைய 'டிரங்கு,' 'சூட்கேஸ்,' 'ஹோல்டால்' எல்லாவற்றையும் பழுதுபார்த்து வைத்துக் கொள்ளுங்கள். புதியவற்றின் விலை அதிகம்.

## உங்களுக்கு இன்றியமையாதவை தவிர பிறவற்றை வாங்காதீர்கள்

AAA 3

இந்திய சர்க்கார் இ. & பி. இலாகா வெளியீடு.

# ஔவையாரின் ஆசி

எட்டயபுரம் பாரதி ஞாபகச் சின்னத்துக்கு ஔவை மூதாட்டியின் ஆசி கிடைத்திருக்கும் செய்தியை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறேன். ஆசியுடன், ஜூன் மீ 3வ நடக்கும் அஸ்திவார விழாச் செலவுக்காக ரூ. 1140-ம் ஔவை பிராட்டியார் அனுப்பி வைத்திருக்கிறார்!

இதைவிடச் சுபகரமான - நற்சகுனம் மேற்படி ஞாபகார்த்த முயற்சிக்கு வேறு என்ன ஏற்பட முடியும்?

பழந்தமிழ் நாட்டின் பெருமை, பண்பாடு, கல்வி மகிமை, பெண்மைச் சிறப்பு ஆகியவற்றுக் கெல்லாம் என்றும் அழியா அறிகுறியாய், ஞாபகச் சின்னமாய், விளங்குவது ஔவை மூதாட்டியின் பெயர்.

அந்தத் தமிழ்ப் பெருங் கிழவியின் வாழ்க்கையை அற்புத நாடகமாகக் கற்பனை செய்து, சித்திரித்து, டி. கே. எஸ். சகோதரர்கள் திருச்சியில் நாடகம் நடத்தி வருகிறார்கள். 19வ நடந்த மேற்படி நாடகத்தின் ஆரம்ப தின வசூல் ரூ. 1140-ஐ எட்டயபுரத்தில் நடக்கும் அஸ்திவார விழாச் செலவுக்காக அவர்கள் கொடுத்தார்கள். பொதுநலத்துக் குரிய காரியங்களில் ஸ்ரீ டி. கே. எஸ். சகோதரர்களின் ஊக்கம் வெகு காலமாகப் பிரசித்தி பெற்றது. அவர்களுக்குத் தமிழ் மக்களின் சார்பாக மனமார்ந்த நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

மேற்படி நாடகத்துக்கு எட்டயபுரத்திலிருந்து பாரதி மன்றத்தைச் சேர்ந்தவர்கள் கூட்டமாக வந்திருந்தார்கள். வசூல் தொகையை நாடக மேடையிலேயே அவர்களுடைய தலைவரிடம் நான் ஒப்புவித்து, "இதை வைத்துக்கொண்டு அஸ்திவார விழாவை நடத்துங்கள். போதும் போதாததற்கு உங்களுடைய உற்சாகம் இருக்கிறது. உங்கள் ஊர் மகாராஜாவும் இருக்கிறார்!" என்றேன். அவர்களும் சக்கைப் போடு போட்டு விடுவதாகச் சொல்லி விட்டுப் போயிருக்கிறார்கள். உற்சாகம் ஒன்றையே மூலதனமாக வைத்துக் கொண்டு வெறுங் கையிலேயே முழும் போடக்கூடிய பெயர் வழிகளிடம் ரூ. 1140 இருக்கும்போது கேட்க வேண்டுமா?

விழாவின் சிறப்புக்கு இன்னும் சில அம்சங்களும் சேர்ந்திருக்கின்றன.

முதன் முதலில் பாரதியார் பிறந்த ஊரில் அவர் பெயரால் விழா நடத்தும்போது, சங்கீதக் கச்சேரிகள் சிலவும் நடைபெற வேண்டுமென்று பல நண்பர்கள் அபிப்பிராயப்பட்டார்கள்.

"இதுவோ கல்யாண காலம்; வித்வான்களுக்கெல்லாம் ஏகக் கிராக்கியாயிருக்குமே! இப்போது போய் அவர்களைச் சிரமப்படுத்தலாமா?" என்று எனக்குக் கொஞ்சம் தயக்கமாய்த்தா னிருந்தது. ஆயினும் நண்பர்களின் அபிப்பிராயத்தைப் புறக்கணிக்காமல் பல வித்வான்களுக்கு எழுதினேன். அவர்களில் கான கலாதர மதுரை மணி ஐயர், கானஸரஸ்வதி ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள், தஞ்சாவூர் நாராயணஸ்வாமி அப்பா, ஸ்ரீ பி. எஸ். வேதாசலம் செட்டியார், ஸ்ரீ டி. கே. ரங்காச்சாரி ஆகியவர்கள் தங்களுடைய மற்ற அலுவல்களை யெல்லாம் ஒத்திப் போட்டு விட்டு எட்டயபுரத்தில் 2வ 3வகளில் கச்சேரி செய்ய ஒப்புக் கொண்டிருப்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

* * *

பாரதியார் ஞாபகார்த்த முயற்சி தொடங்கியதிலிருந்து பல நண்பர்கள், பாரதியாரின் "காணி நிலம் வேண்டும்" என்னும் பாட்டை எனக்கு ஞாபகப்படுத்தி வந்தார்கள். நானும் அதை இடைவிடாமல் நினைவு வைத்துக் கொண்டுதா னிருந்தேன். எட்டயபுரம் ராஜா அவர்கள் நன்கொடையளித்த நிலம் ஒரு காணிக்குக் கொஞ்சம் குறைவாயிருந்தது. எனவே, அதற்கு அடுத்தாற்போலிருந்த 73 செண்டு நிலத்தை ரூபாய் ஆயிரத்துக்கு வாங்கியிருக்கிறேன். இந்த நிலம் பாரதியாரின் தாய் - மாமன் ஸ்ரீ ஸாம்பசிவ ஐயரின் புதல்விக்கு மஞ்சட் காணிக்கையாகக் கிடைத்த சொத்து. ஸ்ரீமதி தங்கம்மாளுக்கு மஞ்சட் காணியை விற்க மனமில்லாமல் இருந்தும், பாரதி ஞாபகார்த்தத்துக்கு என்பதை முன்னிட்டு அதற்கு இசைந்தது பெரிதும் பாராட்டத் தக்கதாகும். இந்தக் காரியத்தை முடித்துக் கொடுப்பதில் எனக்குப் பேருதவி செய்த ஸ்ரீமதி தங்கம்மாளின் கணவர் ஸ்ரீ சுந்தரமய்யர் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆகவே, பாரதியாரின் ஞாபகார்த்த நிலையம் கட்டப் போகும் பூமி இப்போது ஒரு காணிக்குக் கொஞ்சம் அதிகமாகவே இருக்கிறது.

---

**சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்கும் பரிசு பெற்றவர்: வி. சேதுராமன், குமாஸ்தா, பி. டபிள்யூ. டி. ஆபீஸ், கடலூர் என். டி.**

# சிவகாமியின் சபதம்

மணியம்

அத்தியாயம் 19

## சுரங்க வழி

ஆயனர் அஜந்தா வர்ண இரகசியத்தில் மனதைச் செலுத்திக் கொண்டிருக்கையில், சக்கரவர்த்தி அசுவபாலரைப் பார்த்து, "என்ன யோகியாரே, யோகப் பயிற்சியெல்லாம் இப்போது எப்படியிருக்கிறது? இந்த வாதாபி மன்னர் வந்தாலும் வந்தார்; யோக சாதனத்தில் மனதைச் செலுத்தவே எனக்கு அவகாசம் இல்லாமல் போய்விட்டது!" என்று கூறி, கண்களினால் சமிக்ஞையும் செய்யவே, அசுவபாலர் சக்கரவர்த்தியைப் பின்தொடர, இருவரும் வீட்டுக்குப் பின்னால் அரண்மனை உத்தியான வனத்தில் இருந்த யோக மண்டபத்துக்குச் சென்றார்கள்.

அவர்கள் போனதும், சிவகாமி கமலியைப் பார்த்து, "அக்கா! உன்னுடைய மாமனார் எத்தனை நாளாக இப்படி யோகம் செய்ய ஆரம்பித்திருக்கிறார்? சக்கரவர்த்தி கற்றுக் கொண்டிருக்கிற கலை எல்லாம் போதாதென்று யோகக் கலை வேறு கற்றுக் கொள்ள ஆரம்பித்திருக்கிறாரா?" என்று கேட்டாள். அதற்குக் கமலி, கண்ணை விஷமமாகச் சிமிட்டிக் கொண்டே, இரகசியம் பேசும் குரலில், "யோகமாவது, மண்ணாங்கட்டியாவது; எல்லாம் வேஷம்! அப்புறம் சொல்லுகிறேன்" என்றாள்.

சற்று நேரத்துக்கெல்லாம் மகேந்திர பல்லவர் யோக மண்டபத்திலிருந்து திரும்பி அந்த வீட்டின் வழியாக வெளியே சென்றபோது, ஆயனர் சென்று குறுக்கிட்டு வணங்கி, "பல்லவேந்திரா! இங்கே நாங்கள் வந்த காரியம் ஆகிவிட்டதல்லவா? இனி, மண்டபப் பட்டுக்குத் திரும்பிப் போகலாமல்லவா?" என்று இரக்கமான குரலில் கேட்டார்.

மகேந்திரர் புன்னகையுடன், "ஆயனரே! சிவகாமியின் அற்புத நடனத்துக்கு இன்னும் நான் வெகுமதிகள் அளிக்கவில்லையே? கொஞ்சம் பொறுத்திருங்கள். மேலும் மண்டபப் பட்டுக்கு நீங்கள் திரும்பிப் போக வேண்டிய அவசியமே ஒருவேளை நேராது. உங்களுடைய பழைய அரண்ய வீட்டுக்கே போகலாம். அல்லது இங்கேயே இருந்தாலும் இருக்கலாம்!" என்றார்.

ஆயனர் கவலை மிகுந்த குரலில், "பிரபு! ஒவ்வோரிடத்திலும் ஆரம்பித்த வேலை அப்படி அப்படியே நடுவில் நிற்கிறதே! இந்த துரதிர்ஷ்டசாலியின் பாக்கியம் போலிருக்கிறது. மண்டபப் பட்டில் ஆரம்பித்த திருப்பணியும் அப்படியே நின்று விட்டால்......" என்று கூறி வந்தபோது, மகேந்திர பல்லவர் குறுக்கிட்டு, "மகா சிற்பியாரே! மனித வாழ்க்கை அநித்தியமானது; அற்பமானது. இதில் நாம் ஒவ்வொருவரும் ஆரம்பித்த காரியத்தைப் பூர்த்தி செய்து விட முடிகிறதா?

கல்கி

நான் தொடங்கிய காரியங்களும் எத்தனையோ நடுவில் நின்றுதான் போயிருக்கின்றன. அதனால் என்ன? நமக்குப் பின் வரும் சந்ததிகள் நிறைவேற்றி வைப்பார்கள். அதற்காகக் கவலைப்படவேண்டாம். மேலும், நமது அரண்மனையில் கூடிய சீக்கிரத்தில் ஒரு கலியாணம் நடக்கப் போகிறது. அப்போது உம் குமாரி நாட்டியம் ஆடவேண்டியிருந்தாலும் இருக்கும்!" என்று கூறி விட்டுச் சிவகாமியை நோக்கி ஒரு மர்மமான புன்னகை புரிந்தார்.

பிறகு, மேலே நடந்து சென்றவர், வாசற்படியண்டை சற்றுத் தயங்கி நின்று, "ஆயனரே! உங்கள் விருப்பத்துக்கு விரோதமாக இங்கே இருக்கும்படி கட்டாயப்படுத்த நான் விரும்பவில்லை. உங்களுக்கு அவசியம் போக வேண்டுமானால், கோட்டை வாசல் கதவுகள் திறந்ததும் போய் வாருங்கள். பிறகு தேவை ஏற்படும் போது உங்களுக்குச் சொல்லி அனுப்புகிறேன்" என்று கூறிவிட்டு, விரைந்து வாசற்படியைக் கடந்து சென்றார்.

* * *

சக்கரவர்த்தி போன பிறகு, சிவகாமி திடீரென்று தரையில் குப்புறப் படுத்துக் கொண்டு விம்மி விம்மி அழத் தொடங்கினாள். கமலி அவளுடைய தலையைத் தூக்கித் தன் மடியின் மீது போட்டுக் கொண்டு, "என் கண்ணே! நீ ஏன் அழுகிறாய்? உனக்கு என்ன காரியம் ஆக வேண்டுமோ சொல்! எந்தப் பாடு பட்டாவது, உயிரைக் கொடுத்தாவது, நான் செய்து கொடுக்கிறேன். நீ கண்ணீர் விட்டால் என் நெஞ்சு உடைந்து விடும்போலிருக்கிறது!" என்றாள்.

சிவகாமி மறுமொழி சொல்லாமல் விம்மவே, "அசடே! நீ எதற்காக அழுகிறாய் என்று எனக்குத் தெரியும். சக்கரவர்த்தி கலியாணத்தைப் பற்றிச் சொன்னதற்காக! அது எப்படி நடக்கும், சிவகாமி? மாமல்லர் உனக்கு வாக்குக் கொடுத்திருக்கும் போது எப்படி நடக்கும்? இந்த மகேந்திர சக்கரவர்த்தி என்னதான் சூழ்ச்சி செய்தாலும், மாமல்லர் வேறொரு பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ள மாட்டார். மாமல்லரின் குணம் எனக்கு நன்றாய்த் தெரியும். அவரிடம் இந்தச் சக்கரவர்த்தியின் சூழ்ச்சி ஒன்றும் பலிக்காது. இவருடைய தந்தை சிம்மவிஷ்ணு மகாராஜாவே திரும்பிவந்து பிரயத்தனப்பட்டாலும் அது நடக்காது!" என்றாள் கமலி.

சென்ற சில நாளாகக் காஞ்சி நகரில் மாமல்லரின் விவாகத்தைப் பற்றிப் பலவித வதந்திகள் உலாவி வந்தன. பாண்டியனைப் புலிகேசியிடமிருந்து பிரிக்கும் பொருட்டு, பாண்டிய குமாரியை மாமல்லருக்குக் கலியாணம் செய்து கொள்வதாய்ச் சக்கரவர்த்தி ஓலை அனுப்பியிருக்கிறார் என்று சிலர் சொன்னார்கள். இன்னும் சிலர் வாதாபி சளுக்கர் குலத்திலேயே மாமல்லருக்குப் பெண் கொள்ளப் போவதாகப் பிரஸ்தாபித்தார்கள்.

இதெல்லாம் கமலியின் காதுக்கும் எட்டியிருந்தபடியால், அவளுடைய மனமும் ஒருவாறு வேதனைப் பட்டுக் கொண்டிருந்தது. ஆகையினால்தான் மாமல்லரின் மன உறுதியைப் பற்றி அவ்வளவு வற்புறுத்தி, சிவகாமிக்கு அவள் தேறுதல் கூறினாள்.

ஆனால் சிவகாமி தேறுதல் அடையவில்லை. மாமல்லரின் பெயரைக் கேட்ட பிறகு இன்னும் விசித்து அழலானாள். "இல்லை, அக்கா, இல்லை! மாமல்லர் என்னை வெறுத்து விடுவார். என்னிடம் அவருக்கிருந்த ஆசையெல்லாம் விஷமாகிவிடப் போகிறது. அவருக்கு அப்படித் துரோகம் செய்துவிட்டேன் இந்தப் பாவி! முன்னமே ஒருதடவை அவர் என்னை வீட்டிலேயே இருக்கச்சொல்லியிருக்க, நான் ஊர் சுற்றப் போய் விட்டேன். இப்போது என்னை மண்டபப்பட்டிலேயே இருக்கும்படி சொல்லியிருக்க, இங்கே நாட்டியம் ஆட வந்துவிட்டேனே. அக்கா! அவர் பாண்டியனை வென்றுவிட்டு நேரே மண்டபப்பட்டுக்கு வருவாரடி! வந்து என்னைத் தேடுவார்! அங்கே என்னைக் காணாமற் போனால், அவருக்கு எப்படி இருக்கும்? நான் இங்கே புலிகேசிக்கு முன்னால் நாட்டியம் ஆட வந்துவிட்டேன் என்று கேள்விப்பட்டால்

அவருக்கு என்னமாய் இருக்கும்?— ஆஹா! இந்தச் சக்கரவர்த்தி என்னை எப்படி வஞ்சித்து விட்டார்! மாமல்லர் அங்கே வந்து என்னைத் தேடுவார் என்று நினைக்கும்போதே என் நெஞ்சு வெடித்து விடும்போலிருக்கிறது!" என்று விம்மிக் கொண்டே கூறினாள் சிவகாமி.

கமலி சற்று நேரம் யோசனையில் ஆழ்ந்திருந்தாள். அவளுடைய கண்களில் ஒரு குறுகுறுப்பும் பிரகாசமும் காணப்பட்டன.

"சிவகாமி! இதற்கு ஏன் இவ்வளவு கவலை? கோட்டை வாசல் திறந்ததும் நீ போகலாம் என்றுதான் சக்கரவர்த்தியே சொல்லி விட்டாரே?" என்றாள்.

"ஆஹா! அவருடைய சூழ்ச்சி உனக்குத் தெரியாதா? எனக்காகவே கோட்டை வாசலை வெகு நாள் வரையில் சாத்தி வைத்திருப்பார், அக்கா!......மாமல்லர் இங்கு வந்து சேரும் வரையில் திறக்க மாட்டார்! நீ வேணுமானால் பார்!" என்று சிவகாமி விம்மினாள்.

"தங்கச்சி! நீ கவலைப்படாதே! கோட்டை வாசல் திறக்கா விட்டால் போகட்டும்; நான் உன்னை எப்படியாவது வெளியே அனுப்பி வைக்கிறேன்!" என்றாள் கமலி.

உடனே, சிவகாமி, விம்மலை நிறுத்தி எழுந்து உட்கார்ந்து, "அக்கா! நிஜமாகத்தானா? அது சாத்தியமா?" என்று கேட்டாள்.

"கமலி மனது வைத்தால் எதுதான் சாத்தியமாகாது? என்னை யார் என்று நினைத்தாய்? இந்த மகேந்திர சக்கரவர்த்தியின் சூழ்ச்சியெல்லாம் என்னிடம் பலிக்குமா?"

"அக்கா! எப்படி என்று சொல்! என்னை எவ்விதம் வெளியில் அனுப்பிவைப்பாய்?" என்று சிவகாமி பரபரப்புடன் கேட்க, கமலி அவள் காதண்டை தன் வாயை வைத்து, "ரொம்ப ரொம்ப ரொம்ப இரகசியம்! சுரங்கவழி மூலமாக!" என்றாள்.

சிவகாமி, ஏற்கெனவே காஞ்சியிலிருந்து வெளியே போக இரகசியச் சுரங்க வழி இருக்கிறதென்று கேள்விப்பட்டதுண்டு. எனவே இப்போது கரை கடந்த ஆவலுடன், "அக்கா! சுரங்க வழி நிஜமாகவே இருக்கிறதா? உனக்கு நிச்சயமாய்த் தெரியுமா?" என்று கேட்டாள்.

கமலி மீண்டும் இரகசியக் குரலில் கூறினாள்: "இரைந்து பேசாதேயடி! மாமாவின் யோக சாதனத்தைப் பற்றிச் சொல்கிறேன் என்றேன் அல்லவா? அதோ தெரிகிறதே, அந்த அரண்மனைத் தோட்டத்து மண்டபத்திலேதான் அவர் யோகம் சாதிக்கிறார். யோகம் என்பதெல்லாம் பொய், தங்கச்சி! சுத்தப் பொய்! அந்த மண்டபத்திலேதான் சுரங்க வழி இருக்கிறது! அதற்குள்ளேயிருந்து குண்டோதரன் அடிக்கடி வெளி வருவதை நான் பார்த்திருக்கிறேன். சக்கரவர்த்திகூடச் சில சமயம்......"

"என்ன, அக்கா, சொல்கிறாய்? குண்டோதரனா?"

"ஆமாமடி, தங்கச்சி! ஆமாம்! குண்டோதரன் என்று சக்கரவர்த்தியின் ஒற்றன் ஒருவன் இருக்கிறான். சத்ருக்னன் என்று இன்னொருவன் இருக்கிறான். இரண்டு பேரும் பொல்லாத தடியர்கள்!.......... என்னடி யோசிக்கிறாய்?"

"ஒன்றுமில்லை, சொல், அக்கா! அந்தச் சுரங்க வழி உனக்கு எப்படித் தெரிந்தது?"

"அந்த யோக மண்டபத்தின் பக்கம் நான் வரவே கூடாது என்று என் மாமனார் சொல்லியிருந்தார். அதனாலேயே அவருக்குத் தெரியாமல் நான் அடிக்கடி போய்ப் பார்த்தேன். சில நாள் வரையில் ஒன்றும் தெரியவில்லை. என் மாமனார் மட்டுந்தான் தனியாக அங்கு உட்கார்ந்திருந்தார். ஆனால் ஒரே ஒரு நாள் நான் போய் எட்டிப் பார்த்தபோது, மண்டபத்தின் மத்தியில் இருந்த சிவலிங்கம் அப்பால் நகர்ந்திருந்தது. லிங்கம் இருந்த இடத்தில் ஒரு பெரிய துவாரம் தெரிந்தது. அதற்குள்ளேயிருந்து குண்டோதரன் வெளியே வந்து கொண்டிருந்தான். அப்போது மண்டபத்திற்குள்ளே யார் இருந்தது என்று நினைக்கிறாய்? என் மாமனாரோடு சக்கரவர்த்தியும் அங்கே நின்று கொண்டிருந்தார்."

சிவகாமி சற்றுச் சிந்தித்துவிட்டு, "கமலி அக்கா! எப்படியாவது அங்

தச் சுரங்கத்தின் வழியாக எங்களை நீ வெளியே அனுப்பி விட்டால், உனக்குக் கோடி புண்ணியம் உண்டு. என்றென்றைக்கும் நான் உன் அடிமையா யிருப்பேன!'' என்றாள்.

''பேச்சைப் பார், பேச்சை! எனக்கு அடிமையா யிருக்கப் போகிறாளாம்! அடி பொல்லாத நீலி! நீ இந்த இராஜ்யத்துக்கே இராணியாகப் பார்க்கிறாய்; எனக்கு அடிமையாகிறவளா நீ? வாக்குக் கொடுத்து விட்டு அப்புறம் தின்டாடாதே!'' என்றாள்.

பிறகு, ''ஆகட்டும், தங்கச்சி! கொஞ்சம் பொறுமையா யிரு! அந்த மண்டபத்தின் மத்தியில் ஒரு சிவலிங்கம் இருக்கிறது. அதை இடம் விட்டு நகர்த்தினால் சுரங்க வழி தெரியும். லிங்கத்தை எப்படி இடம் விட்டு நகர்த்துவ தென்பதை இன்றைக்கு நாளைக்குள் எப்படியாவது தெரிந்து கொள்கிறேன். அப்புறம், வேண்டுமானால் நீங்கள் போகலாம். ஆனால், சிவகாமி, நீ இவ்வளவு அவசரப்பட்டு என்ன பிரயோஜனம்? உன் தகப்பனார் உன்னுடன் வருவதற்குச் சம்மதிக்க வேண்டுமே?'' என்று கமலி கவலையுடன் கேட்டாள்.

''இல்லை, அக்கா. என்னைவிட அவர் தான் வெளியே போவதற்கு அதிக அவசரப்படுவார்! அதற்குத் தக்க காரணம் இருக்கிறது'' என்றாள் சிவகாமி.

அதே சமயத்தில் வாசற் பக்கமிருந்த ஆயனர் அவர்களின் அண்டையில் வந்து, ''இன்னும் எத்தனை நாளைக்கு இந்தக் கோட்டைக்குள் அடைபட்டுக் கிடக்க வேண்டுமோ தெரியவில்லை. வந்த காரியம் ஆனதும் உடனே புறப்பட்டால் அல்லவா நல்லது? இனிமேல் ஒரு விநாடி நேரங்கூட இங்கே எனக்கு இருப்புக் கொள்ளாது...... சிவகாமி! உனக்குத் தெரியுமா? முன்னொரு நாள் அந்தப் பரஞ்சோதி என்கிற பிள்ளையிடம் நாகநந்தி ஓலை கொடுத்து அனுப்பினாரே, அஜந்தா வர்ண இரகசியத்துக்காக? புலிகேசி மகாராஜாவுக்குத்தான் அந்த ஓலையைக் கொடுத்து அனுப்பினாராம்! அடாடா! அந்தப் பிள்ளைதான் எப்படி என்னை ஏமாற்றி விட்டான்? அவன்தான் இப்படிப் பண்ணினான் என்றால், நமது சக்கரவர்த்திகூட என்னை ஏமாற்றி விட்டாரே! வாதாபி மகாராஜா காஞ்சியில் இருக்கும் போதே சொல்லி யிருந்தால், நான் அந்தச் சளுக்க குல சிரேஷ்டரிடம் கெஞ்சிக் கூத்தாடி அஜந்தா வர்ண இரகசியத்தைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொண்டிருப்பேனல்லவா?'' என்று புலம்பிக் கொண்டே போனார்.

''புலிகேசி மகாராஜாவுக்கு அந்த இரகசியம் தெரிந்திருப்பது என்ன நிச்சயம், அப்பா?'' என்று சிவகாமி இடையில் குறுக்கிட்டுக் கேட்டாள்.

''கட்டாயம் தெரிந்திருக்க வேண்டும், சிவகாமி! புலிகேசியின் இளம் பிராயத்தில் அவர் அஜந்தா மலைக் குகையிலேயே கொஞ்ச காலம் ஒளிந்து கொண்டிருந்தார் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்......மழை விட்டும் தூவானம் விடவில்லை என்பது போல, சண்டை முடிந்து சமாதானம் ஏற்பட்ட பிறகு கூட இந்தக் கோட்டை வாசல் மூடுகிற தொல்லை தீரவில்லையே?'' என்றார் ஆயனர்.

அப்போது கமலியும் சிவகாமியும் ஒருவரை ஒருவர் பார்த்துப் புன்னகை புரிந்து கொண்டார்கள். ஆயனர் மேற்கண்டவாறு பேசப் பேச அவர்களுக்கு உற்சாகம் மேலும் மேலும் அதிகமாகிக் கொண்டிருந்தது.

## அத்தியாயம் 20

# காபாலிகர் குகை

வாதாபி சக்கரவர்த்தி காஞ்சி நகரிலிருந்து புறப்பட்டுச் சென்று மூன்று நாள் ஆகியும், கோட்டை வாசற் கதவுகள் திறக்கப்பட வில்லை. இதைப் பற்றி நகரில் பல வகை வதந்திகள் உலாவிக் கொண்டிருந்தன. ''ஒப்பந்தப்படி வாதாபிப் படைகள் திரும்பிப் போகவில்லை; மறுபடியும்

கோட்டையை நெருங்கி வந்து வளைந்து கொண்டிருக்கின்றன!'' என்று சிலர் சொன்னார்கள்.

புலிகேசி வெளியில் போன பிறகு மகேந்திர பல்லவருக்கு ஏதோ ஓலை அனுப்பி யிருப்பதாகவும், அதற்கு மறுமொழியை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருப்பதாகவும் சிலர் சொன்னார்கள்.

ஓலையில் எழுதியிருந்த செய்தியைப் பற்றியும் பலவாறு பேசப்பட்டது.

''வாதாபி மகாராஜாவுக்கு மிகவும் வேண்டியவரான யாரோ ஒரு புத்த பிக்ஷுவை மகேந்திர பல்லவர் சிறையில வைத்திருக்கிறாராம். அவரை உடனே விடுதலை செய்து அனுப்பாவிடின் மீண்டும் யுத்தம் தொடங்குவேன்!'' என்று புலிகேசி பயமுறுத்தி ஓலை அனுப்பி யிருப்பதாகச் சிலர் சொன்னார்கள்.

''ஆயனரையும் சிவகாமியையும் என்னுடன் அனுப்பி வைக்க வேண்டும்; இல்லாவிடில் யுத்தத்துக்கு ஆயத்தமாக வேண்டும்'' என்று அந்த ஓலையில் எழுதியிருந்ததாக இன்னொரு வதந்தி உலாவியது.

மகேந்திர பல்லவருடைய ஆட்சிக் காலத்தில் காஞ்சி நகர மாந்தர் முதன் முதலாக இப்போதுதான் அவரைப் பற்றிக் குறை கூற ஆரம்பித்திருந்தார்கள்.

''புலிகேசியைக் காஞ்சிக்குள் வர விட்டதே பிசகு!'' என்று சிலர் சொன்னார்கள்.

'அப்படியே நகருக்குள் விட்டாலும் அவனுக்கு என்ன இவ்வளவு உபசாரம்? சத்துரு அரசனிடம் இவ்வளவு தாழ்ந்து போகலாமா? போனால், அவனுக்கு ஏன் கர்வம் தலைக்குமேல் ஏறாது?'' என்று சிலர் கேட்டார்கள்.

''எது போனாலும் போகட்டும். அந்த மூர்க்கனுக்கு முன்னால், நமது கலைச்செல்வி சிவகாமியை ஆடச் சொல்லி யிருக்க வேண்டியதில்லை. சிவகாமியின் நடனத்தைப் பார்த்து விட்டுத்தான் புலிகேசி தேன்குடித்த நரியாக ஆகிவிட்டான்!'' என்று வேறு சிலர் அபிப்பிராயப் பட்டார்கள்.

இந்த மாதிரியான நகர மாந்தர் பேச்செல்லாம் கமலி மூலமாக வடிகட்டி வந்து ஆயனரின் காதிலேயும் எட்டியது. அதிலெல்லாம் ஒரே ஒரு விஷயந்தான் ஆயனர் மனதில் ஆழமாய்ப் பதிந்தது. அதாவது, வாதாபி சக்கரவர்த்தி இன்னும் பிரயாணம் கிளம்பி விடவில்லை; வடக்குக் கோட்டை வாசலுக்குக் கொஞ்ச தூரத்தில் வாதாபிப் படையின் தண்டு இன்னும் இருக்கிறது என்னும் விஷயந்தான.

''வாதாபி மன்னர் புறப்படுவதற்குள் இந்தக் கோட்டையை விட்டு நாம் வெளியேறி விட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்? அவரை எப்படியும் பார்த்து அஜந்தா வர்ணத்தைப் பற்றிக் கேட்டு விடுவேனே?'' என்று அடிக்கடி ஆயனர் சொல்லிக் கொண்டிருந்தார். ஒரு தடவை, திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவர் போல், ''நகரிலிருந்து வெளியே போவதற்குச் சுரங்க வழி ஒன்று இருக்க வேண்டும். அது எங்கே இருக்கிறது என்று தெரிந்தால் போய்விடலாம்!'' என்றார்.

இதைக் கேட்ட சிவகாமி கண்களில் மின்வெட்டுடன், ''நிஜந்தானா, அப்பா! சுரங்க வழி தெரிந்தால் போய்விடலாமா?'' என்று கேட்டாள்.

''போய் விடலாம். ஆனால் அது யாருக்குத் தெரியும்? நான்கூட அந்தச் சுரங்க வழியில் கொஞ்ச நாள் வேலை செய்திருக்கிறேன். ஆனால் அதற்கு வாசல் எங்கே என்று மட்டும் தெரியாது! அதை எப்படிக் கண்டு பிடிப்பது?'' என்று ஆயனர் ஏமாற்றமான குரலில் கூறினார்.

''அப்பா! நம் கமலி அக்காவுக்கு அந்தச் சுரங்க வழி தெரியுமாம்!'' என்று சிவகாமி மெல்லிய குரலில் கூறியதும், ஆயனர் பரபரப்புடன் எழுந்து கமலியின் அருகில் வந்து அவளுடைய கைகளைப் பிடித்துக் கொண்டு, ''என் கண்ணே! குழந்தாய்! உன் தங்கச்சி சொல்வது உண்மைதானா? அப்படியானால் நீ எனக்கு அந்தச் சுரங்கத்தைக் காட்டவேணும். இந்த உதவியை என் ஆயுள் உள்ள வரை மறக்கமாட்டேன்'' என்றார்.

"ஆகட்டும், சித்தப்பா! ஆனால், சமயம் பார்த்துத்தான் உங்களைச் சுரங்க வழிக்கு அழைத்துப் போக வேண்டும். அங்கே பலமான காவல் இருக்கிறது!" என்றாள் கமலி.

• • •

மூன்று தினங்களாக அசுவபாலர் அநேகமாய் யோக மண்டபத்திலேயே காலங் கழித்து வந்தார். மண்டபத்திலிருந்து அடிக்கடி மணிச் சத்தமும் கலகலத் தொனியும் பேச்சுக் குரலும் கேட்டுக் கொண்டிருந்தன.

நாலாம் நாள் இரவு ஜாமத்தில் ஆயனர் தூக்கம் பிடிக்காமல் பலகணியின் வழியாக அரண்மனைத் தோட்டத்தை எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தபோது, நிலா வெளிச்சத்தில் ஒரு அதிசயமான காட்சியைக் கண்டார். தோட்டத்தின் வழியாக நல்ல ஆஜானுபாகுவான ஆகிருதி உடைய ஒருவரை இரண்டு புறத்திலும் இரண்டு பேர் கையைப் பிடித்து நடத்திக் கொண்டு வந்தார்கள். நடுவில் இருந்தவரின் கண்கள் துணியினால் கட்டப்பட்டிருந்ததாகக் காணப்பட்டது.

இன்னும் சற்று உற்றுப் பார்த்தபோது நடுவில் நடந்துகொண்டிருந்த ஆஜானுபாகுவான உருவம் ஒரு புத்த பிக்ஷுவின் வடிவமாகக் காணப்பட்டது. அது மட்டுமல்ல. எப்படியோ அந்த உருவம் ஆயனருக்கு நாகநந்தியை நினைவூட்டியது. ஒருவேளை நாகநந்திதானோ அவர்? ஊர் வதந்தியின்படி இந்த புத்த பிக்ஷுவுக்காகத்தான் புலிகேசி இத்தனை நாள் காத்துக் கொண்டிருந்தாரோ? நாகநந்தியை அதற்காகத்தான் சுரங்க வழியாக அனுப்புகிறார்களோ? அப்படியானால், நாகநந்தி போய்ச் சேர்ந்ததும் புலிகேசி புறப்பட்டு விடுவாரல்லவா? — ஆஹா! எப்பேர்ப்பட்ட அருமையான சந்தர்ப்பம் கை நழுவிப் போய்க் கொண்டிருக்கிறது?

நாகநந்திக்கும் புலிகேசிக்கும் உள்ள உருவ ஒற்றுமை ஆயனருடைய மனதிலும் அப்போது தென்பட்டது. நாகநந்தியடிகள் உண்மையில் யாராயிருக்கலாம்?.........இவ்விதம் பற்பல எண்ணங்களினால் அலைப்புண்ட ஆயனர் அன்றிரவு தூங்கவே இல்லை.

பொழுது புலரும் சமயத்தில் யோக மண்டபத்திலிருந்து வீட்டுக்கு வந்த அசுவபாலர் ஆயனரைப் பார்த்தார். "என்ன சிற்பியாரே! இரவெல்லாம் நீர் தூங்கவில்லை போலிருக்கிறதே!" என்றார். "ஆம், ஐயா! தோட்டத்திலும் உங்களுடைய யோக மண்டபத்திலும் இரவெல்லாம் ஒரே கலகலப்பாயிருந்ததே! என்ன விசேஷம்?" என்று ஆயனர் கேட்டார்.

அசுவபாலர் தமக்குள்ளே, "ஆஹா! இந்தமாதிரி சந்தர்ப்பத்தில் இவரை இங்கே வைத்துக் கொண்டிருப்பதே பிசகு!" என்று சொல்லிக் கொண்டார். உரத்த குரலில், "கலகலப்பாவது, ஒன்றாவது? ஒருவேளை நீங்கள் கனவு கண்டிருப்பீர்கள்!" என்று சொல்லிவிட்டு "நண்பரே! ஆனால் ஒன்று உண்மை. நேற்றிரவு யோக சாதனத்திலே நான் ஒரு அபூர்வமான அனுபவத்தை அடைந்தேன். அதை உடனே போய்ச் சக்கரவர்த்தியிடம் சொல்லிவிட்டு வரவேண்டும்!" என்று கூறி விரைந்து வெளியே சென்றார்.

அவர் போய்ச் சில நிமிஷத்துக்கெல்லாம் கமலி வந்து ஆயனர், சிவகாமி இருவரையும் அவசரப்படுத்தினாள். ஏற்கெனவே முடிவு செய்திருந்தபடி முக்கியமான ஆணி மணிகளை ஒரு ஓலைப் பெட்டியில் எடுத்து வைத்துக் கொண்டு எந்த நிமிஷமும் கிளம்புவதற்கு அவர்கள் சித்தமாயிருந்தார்கள். எனவே, உடனே மூவரும் கிளம்பி அரண்மனைத் தோட்டத்திலிருந்த மண்டபத்துக்குள் சென்றார்கள். மண்டபத்தின் மத்தியில் இருந்த சிவலிங்கத்தைக் கமலி லாகவமாக அப்புறம் நகர்த்தினாள். லிங்கம் இருந்த இடத்தில் சுரங்க வழியின் படிக்கட்டுக் காணப்பட்டது.

கமலி ஆயத்தமாக வைத்திருந்த தீபத்தை எடுத்து ஆயனரிடம் கொடுத்து, "சீக்கிரம், சித்தப்பா, சீக்கிரம்!" என்றாள். ஆயனர் அந்த தீபத்தை வாங்கிக் கொண்டு சுரங்க வழியின் படிக்கட்டில் இறங்கினார்.

சிவகாமி கமலியை ஆர்வத்துடன் கட்டிக் கொண்டாள். இருவருடைய கண்களிலும் கண்ணீர் ததும்பிற்று.

"அக்கா! போய் வருகிறேன்!" என்றாள் தழுதழுத்த குரலில் சிவகாமி.

"தங்கச்சி! போய் வா! மறுபடி காஞ்சிக்குத் திரும்பி வரும்போது பல்லவ குமாரரின் பட்ட மகிஷியாகத் திரும்பி வரவேண்டும்!" என்று கமலி ஆசி கூறினாள்.

"அக்கா! நான் திரும்பி வரும் வரை எனக்காகச் சின்னக் கண்ணனுக்குத் தினம் ஆயிரம் முத்தம் கொடு!" என்றாள் சிவகாமி.

கமலி சிரித்துக் கொண்டே, "மூச்சு முட்டிச் சாக வேண்டியதுதான்!" என்றாள்.

சிவகாமி சுரங்கப் படியில் இறங்கியபோது அவளுடைய உள்ளம் பதைபதைத்தது. அவளுடைய மார்பு பட், பட் என்று அடித்துக் கொண்டது.

ஒளி நிறைந்த குதூகலமான உலகத்திலிருந்து. இருளும் ஐயமும் பயங்கரமும் நிறைந்த ஏதோ ஒரு பாதாள உலகத்துக்குப் போவது போன்ற உணர்ச்சி சிவகாமிக்கு ஏற்பட்டது.

அந்த உணர்ச்சியை மனோதிடத்தினால் போக்கிக் கொண்டு, பலகைக்



கடித்து உறுதியும் தைரியமும் வரவழைத்துக் கொண்டு, ஆயனரின் பின்னால் அவள் நடக்கலானாள்.

இருளடர்ந்த சுரங்கப் பாதையில் ஆயனரும் சிவகாமியும் ஏறக்குறைய ஒரு முகூர்த்த நேரம் நடந்தார்கள். இவ்வளவு நேரமும் அவர்களுக்குள் அதிகமான பேச்சு ஒன்றும் நடைபெறவில்லை.

அடிக்கடி ஆயனர் நின்று சிவகாமியின் கையைப் பிடித்து, "இன்னும் அதிக தூரம் இராது, அம்மா! சீக்கிரம் வழி முடிந்துவிடும்!" என்று தைரியப் படுத்திக் கொண்டு போனார்.

ஒரு முகூர்த்த நேரத்துக்குப் பிறகு, திடீரென்று வெப்பம் மாறி ஜில்லிப்பு உணர்ச்சி ஏற்பட்டது.

"அம்மா, சிவகாமி! கோட்டைக்கு வெளியே வந்துவிட்டோம். அகழியைக் கடக்கிறோம்!" என்றார். ஒரு கணம் அங்கே நின்று, "குழந்தாய்! இங்கேதான் நான் வேலை செய்ததாக ஞாபகம் இருக்கிறது. அகழித் தண்ணீர் உள்ளே வராமல் வெகு சாதுரியமான வேலை இங்கே செய்ய வேண்டியிருந்தது. அதோடு இல்லை. ஏதாவது ஆபத்துக் காலங்களில் இந்தச் சுரங்க வழியை மூடிவிடவும் இங்கேதான் உபாயம் இருக்கிறது.



இதோ, பார்த்தாயா? அந்த அடையாளமிட்ட இடத்தில் ஒரு கல்லை இலேசாகப் பெயர்த்தால், அகழி ஜலம் கடகட வென்று உள்ளே புகுந்து விடும். அப்புறம் வெளியிலிருந்தும் உள்ளே போக முடியாது. உள்ளேயிருந்தும் வெளியே போக முடியாது!" என்றார்.

"நல்ல வேளை! அப்படி ஏதாவது ஏற்படுவதற்கு முன்னால் நாம் வெளியே போய்விடுவோமல்லவா?" என்றாள் சிவகாமி.

அதற்குப் பிறகு இன்னும் ஒரு முகூர்த்த நேரம் வழி நடந்த பிறகு, மேலேயிருந்து வெளிச்சம் வருவதைக் கண்டார்கள்.

"ஆ! வழி முடிந்து விட்டது!" என்றார் ஆயனர்.

இருவரும் படிகள் வழியாக மேலே ஒளி வந்த இடத்தை நோக்கி ஏறிச் சென்றார்கள்.

அவர்கள் ஏறி வந்து நின்ற இடம் ஒரு சின்ன மலைப்பாறையில் குடைந்து அமைக்கப்பட்ட சமணர்களின் குகைக் கோயில். ஜைன தீர்த்தங்கரர்களின் பிரம்மாண்டமான பிரதிமைகள் மூன்று அங்கே காணப்பட்டன.

ஆனால் என்ன பயங்கரம்? காபாலிகர்கள் அந்தச் சமணக் குகையை ஆக்கிரமித்து விட்டதாகத் தோன்றியது. எங்கே பார்த்தாலும் மண்டை ஓடுகள் சிதறிக் கிடந்தன.

போதாததற்கு, மூன்று தீர்த்தங்கரர்களின் சிலைகளுக்கு அப்பால் நாலாவது சிலையாகக் கண்ணை மூடிக் கொண்டு ஒரு காபாலிகன் உட்கார்ந்திருந்தான். உடம்பெல்லாம் சாம்பலைப் பூசிக்கொண்டு மண்டை ஓட்டு மாலை அணிந்திருந்த அவனுடைய தோற்றம் மிகக் கோரமாயிருந்தது.

ஆம்; நல்ல வேளையாக அவன் கண்களை இறுக மூடிக்கொண்டு நிஷ்டையில் உட்கார்ந்திருந்தான்.

ஆயனரும் சிவகாமியும் இரண்டாவது தடவை அவனை ஏறிட்டுப் பார்க்காமல் பாறையின் படிகள் வழியாகக் கீழே இறங்கி விரைந்து சென்றார்கள்.

கொஞ்ச தூரம் சென்றபிறகு, "அப்பா! இதென்ன? சமணர் குகைக் கோயிலில் காபாலிகன் வந்து உட்கார்ந்திருக்கிறானே?" என்று சிவகாமி கேட்டாள்.

"அம்மா! இந்தப் பாறை ஒரு காலத்தில் சமணப் பள்ளியாக இருந்தது. மகேந்திர பல்லவரிடம் கோபித்துக்கொண்டு சமணர்கள் தான் இந்த நாட்டை விட்டுப் போய்விட்டார்களே! கோட்டை முற்றுகைக்கு முன்னால் காஞ்சி நகரிலுள்ள காபாலிகர்களையெல்லாம் வெளியில் துரத்தியபோது இந்தக் குகையை அவர்கள் பிடித்துக் கொண்டார்கள் போலிருக்கிறது! அவர்களுக்கு என்ன வந்தது? யுத்தம் என்றால் கொண்டாட்டந்தானே? கபாலங்கள் ஏராளமாய்க் கிடைக்குமல்லவா?"

இப்படிப் பேசிக்கொண்டு ஆயனரும் சிவகாமியும் காட்டுப் பிரதேசத்தின் வழியே நடந்து போனார்கள். கொஞ்ச தூரம் போவதற்குள்ளே, அவர்களுக்கு எதிர்ப் புறத்திலிருந்து பலர் கும்பலாக வரும் பெரு முழக்கம் கேட்டது. சில நிமிஷத்துக்கெல்லாம், ஒரு பெரும் கும்பல் அவர்கள் கண் முன்னால் எதிர்ப்பட்டது. அப்படி வந்தவர்கள் வாதாபிப் படையைச் சேர்ந்த வீரர்கள் தான! அவர்களுக்கு மத்தியில் தூக்கிப் பிடிக்கப்பட்டு வந்த வராகக் கொடியிலிருந்து இது தெளிவாகத் தெரிந்தது!



## - மந்திர ஜமக்காளம் அல்ல

அதிசயங்கள் நிகழும் காலம் கடந்துவிட்டது. நாம் நினைக்க ஆரம்பித்த உடனேயே காரியங்கள் நடப்பதில்லை. அவைகளுக்கு மாதங்கள்-வருஷங்களுக்கு முன்னரே திட்டம்போட்டாகவேண்டும். பெண்ணுக்கு சீர், பிள்ளையின் படிப்புக்கு - ஒரு வேளை வெளி நாட்டில் கல்விக்காக - நிதி அல்லது வயோதிக காலத்தில் பென்ஷன் இவைகளில் எல்லாம் இப்பொழுது உங்கள் கவனத்தைச் செலுத்த வேண்டும். உங்கள் தேவைகளைப்பற்றி எங்களுக்குத் தெரியப்படுத்துங்கள் நாங்கள் திட்டம் போட்டுத் தருகிறோம்.

# பிருத்வி இன்ஷியூரன்ஸ்

கம்பெனி லிட்.

தலைமை ஆபீஸ்: 120, அரமனைகாரன் தெரு, ஜி.டி. சென்னை

# குமாஸ்தாக்கள்

ராயல் இந்தியன் கடற்படையில் ரைட்டர்களுக்கும், (இந்தியன் தரைப்படை குமாஸ்தாக்கள் பகுதி உட்பட) இந்தியன் தரைப் படையிலும், ராயல் இந்தியன் ஆகாயப் படையிலும் குமாஸ்தாக்களுக்கும் உத்தியோகங்கள் காலியுள்ளன.

# பெறுமதியுடைய பயிற்சி

இவ்வுத்தியோகங்கள் எதிலும் சரி, நீங்கள் பெறும் அனுபவ ஞானமும் பயிற்சியும் யுத்த பிற்காலம் இந்தியன் வர்த்தகத்துக்கு கட்டாயம் மிகவும் பயன்படும்.

நல்ல சம்பளம்

இலவச உணவு

பூராச் சம்பளத்துடன் ரஜா

இலவச இட வசதி

இலவச சிகிச்சை

இலவச உடைகள்

## இன்றே எழுதவும்

இந்த உத்தியோகங்களுக்குத் தகுதியுற என்னென்ன யோக்கியதாம்சங்கள் தேவை என்பது பற்றி பூரா விவரங்களுக்கு கீழ் குறித்துள்ள ஆபீஸுகளில் உங்களுக்கு மிகவும் அருகிலுள்ள ஆபீஸுக்கு உடனே எழுதவும்

AAA 135

மதராஸ் : ... புதுப்பேட்டை லேன்ஸ், மவுண்டு ரோடு [illegible]
பெங்களூர் : ... கப்பன் ரோடு.
திருச்சிராப்பள்ளி : ... மதுரை ரோடு.
பெஜவாடா : ... பந்தர் ரோடு.
வேலூர் : ... 15, ஆபீஸர்ஸ் லேன்ஸ்.
மைசூர் : ... காந்தி ஸ்கொயர்.

# ஒத்துழையாமை

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

யுத்தம் ஆரம்பிப்பதற்கு முதல் நாள் பீஷ்மர் துரியோதனனுக்குத் தைரியம் சொல்லிக் கொண்டிருந்தார். அவனுக்காகப் போர் செய்யப்போகும் வீரர்களுடைய திறமையையும் குணங்களையும் எடுத்துக் காட்டித் துரியோதனனுக்கு உற்சாகம் ஊட்டி வந்தார். கர்ணனைப் பற்றிப் பேச்சு வந்தது. "உன்னுடைய பிரியத்தைச் சம்பாதித்தவனும் உனக்குப் பாண்டவர்கள் பேரில் பகையை வளர்த்து வருபவனும், தன்னைப் புகழ்ந்து கொண்டிருப்பதிலேயே சந்தோஷப் படுகிறவனும் அகங்காரத்திற்கு வரம்பு தெரியாதவனுமான கர்ணனை நான் அதிகமாக மதிக்கவில்லை. இவனை நான் அதிரதர்கள் கணக்கில் சேர்க்கமாட்டேன். இவன் பிறரை நிந்திக்கும் சுபாவம் கொண்டவன். தவிர இவன் தன்னுடைய பிறவிச் சம்பத்தான கவச குண்டலங்களை இழந்துவிட்டிருக்கிறபடியால் நம்முடைய யுத்தத்தில் அதிகமாக உதவச் சக்தியற்றவன். பரசுராமருடைய சாபத்தினால் ஆபத்துக் காலத்தில் இவன் நினைவை இழப்பான். அர்ஜுனனோடு செய்யப் போகும் யுத்தத்தில் இவன் உயிருடன் மீளமாட்டான்."—இவ்வாறு பீஷ்மர் உள்ளதை உள்ளது போல் துரியோதனனுக்கும் கர்ணனுக்கும் மிகவும் பிரியமான வார்த்தைகளைச் சொன்னார்.

துரோணரும் அதையே ஆமோதித்து "இவன் கர்வம் கொண்டவன். விஷயங்களைக் கவனிக்கமாட்டான். அஜாக்கிரதையால் தோல்வி அடைவான்" என்றார்.

கடுமையான இந்தச் சொற்களைக் கேட்டுக் கொண்டிருந்த கர்ணன் கோபம் கொண்டு, கண்கள் சிவந்து, பீஷ்மரைப் பார்த்துப் பேசலானான்:

"பிதாமகரே! ஒரு குற்றமும் செய்யாத என்னை நீர் எப்போதும் அவமதித்து வருகிறீர். துவேஷத்தினாலும் பொருமையினாலும் சொல்-அம்புகளினால் அடிக்கடி இவ்விதம் என்னைக் குத்துகிறீர். துரியோதனனுக்காக அவற்றையெல்லாம் நான் பொறுத்து வந்தேன். யுத்தத்தில் நான் உங்களுக்கு உதவமாட்டேன் என்று சொல்வீர். என்னுடைய நிச்சயமான அபிப்பிராயத்தைக் கேளும். நீர்தான் உதவமாட்டீர். பொய் சொல்ல வேண்டாம். உமக்குக் கௌரவர்கள் மேல் அன்பு கிடையாது. அரசனுக்கு இது தெரியாது. உம்முடைய துவேஷத்தினால் துரியோதனனுக்கு என்மேல் உண்டாகியிருக்கும் பிரியத்தைக் கெடுக்கப் பார்க்கிறீர். நண்பர்களுக்குள் பேதத்தை உண்டாக்குவதற்காக என்னுடைய உண்மையான பராக்கிரமத்தைக் குறைத்துச் சொல்லியும் நிந்தித்தும் வருகிறீர். உம்மைப் போல் எவனும் இவ்வித அக்கிரமத்தைச் செய்யமாட்டான். க்ஷத்திரியர்களுக்குள் முதுமையால் மட்டும் கௌரவம் இல்லை; பலத்தினால்தான் மதிப்பு உண்டாகும். துரியோதனனுக்கும் எனக்குமுள்ள சிநேகத்தைக் கெடுக்க முயற்சி செய்ய வேண்டாம்"—இவ்வாறு பீஷ்மரை நிந்தித்துத் தாக்கினான்.



தகப்பனார்:— உன்னை வேலைக்கு வைத்துவிட்டு நான் 'ரிடையர்' ஆகிவிடலாம் என்று யோசிக்கிறேன். சோம்பேறித்தனமாய் இப்படி சோபாவில் உட்கார்ந்து கொண்டே இருக்கிறாயே!

மகன்:— எதற்காக அவ்வளவு அவசரம்? இன்னும் கொஞ்சம் நாளைக்கு நீங்களே வேலையில் இருந்துவிடுங்கள். பிறகு இரண்டு பேரும் சேர்ந்தாற்போல் 'ரிடையர்' ஆகிவிடலாம், அப்பா!

பிறகு துரியோதனனைப் பார்த்து "வீரனே! நன்றாய் ஆலோசித்து உன் நன்மையைத் தேடிக் கொள். இந்த பீஷ்மரை நீ நம்பாதே! நம்முடைய போர்வீரர்களுக்குள் பேதம் விளைவிக்க இவர் பார்க்கிறார். என்னைப் பற்றி இவர் சொன்னது உன்னுடைய காரியத்திற்கு இடையூறு விளைவிக்கும். தேஜோபங்கம் செய்து என்னுடைய உற்சாகத்தை அழித்துவிடப் பார்க்கிறார். இவருடைய மூளை வயதினால் தளர்ந்துவிட்டிருக்கிறது. இவர் இறக்கும் தருணம் வந்துவிட்டது. இவருக்கு அகம்பாவம் அதிகம். உலகத்தில் வேறு ஒருவரையும் இவர் மதிக்கிறதில்லை. முதியோர்களுடைய ஆலோசனையை அவசியம் கேட்க வேண்டியதுதான். ஆனால் சாஸ்திரத்தின்படி முதுமைக்கும் ஒரு வரம்பு உண்டு. மறுபடியும் இரண்டாம் பாலபருவமடைந்துவிட்ட இத்தகைய முதுமை ஒன்றுக்கும் உதவமாட்டாது. நீ இவரைச் சேனாபதியாகச் செய்தாய். மற்றவர்கள் செய்யும் வீரச் செயல்களைக் கொண்டு இவர் புகழ் சம்பாதிப்பார். நான் இவருடைய தலைமையில் நடக்கும் யுத்தத்தில் ஆயுதப் பிரயோகம் செய்யமாட்டேன். பீஷ்மர் வீழ்ந்த பின்னரே நான் ஆயுதமெடுப்பேன்" என்றான்.

அகம்பாவம் கொண்ட மனிதனுக்குத் தன் அகம்பாவம் தனக்குத் தெரியாது. அதை எடுத்துச் சொல்லும் மனிதனை அகம்பாவம் கொண்டவனாகக் கருதுவான். குற்றத்தை எடுத்துக் காட்டுவதே பெருங் குற்றமாக அவனுக்குத் தோன்றும். இந்தக் கர்ண பீஷ்ம சம்பாஷணையில் இது நன்றாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது.

பீஷ்மர் "சூத புத்திரனே! மிக்க நெருக்கடியான காலமாக இருக்கிறபடியால் உன் தகாத வார்த்தையையும் நான் பொறுத்துக் கொள்கிறேன். ஆனால் நீ உயிருடன் இருக்கிறாய். துவேஷ புத்தி கொண்ட உன்னைக் கௌரவர்கள் அடைந்தபடியால் அவர்களுக்கு இந்தப் பெரிய கஷ்டம் நேரிட்டது."—இவ்வாறு சொல்லி விட்டு பீஷ்மர் தன் கோபத்தை அடக்கிக் கொண்டார்.

துரியோதனன்: "காங்கேயரே! உங்கள் இருவரிடமும் நான் உதவி பெற வேண்டியவனாக இருக்கிறேன். இருவரும் பெரிய வீரச் செயல்களைச் செய்யப் போகிறீர்கள். விடிந்தவுடன் யுத்தம் நடக்கப் போகிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் கலகம் வேண்டாம்" என்றான்.

பீஷ்மர் சேனாபதியாக இருக்கும் வரையில் ஆயுதம் எடுக்கமாட்டேன் என்று கர்ணன் பிடிவாதமாகச் சொல்லிவிட்டான். துரியோதனனும் அதை ஒப்புக்கொண்டு அவ்வாறே நடைபெற்றது. இக்காரணத்தினால் பாரத யுத்தத்தில் முதல் பத்து நாட்கள் நடந்த போரில் கர்ணன் சேர்ந்து கொள்ளவில்லை. தன்னுடைய சேனையை மட்டும் யுத்தத்தில் ஏவினான். பத்து நாட்கள் தீர்ந்து பீஷ்மர் உடம்பெல்லாம் அம்புகள் பாய்ந்து யுத்தகளத்தில் வீழ்ந்த பின் அவரிடம் கர்ணன் வந்து பணிந்து தன் பிழைகளைப் பொறுத்தருள வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டு பீஷ்மருடைய ஆசீர்வாதத்தையும் பெற்றான். பிறகு கர்ணனே பிரேரேபித்துச் சொல்லி துரோணரைச் சேனாபதியாக அபிஷேகம் செய்தார்கள். அப்போது கர்ணன் யுத்தத்தில் சேர்ந்து கொண்டான். துரோணரும் இறந்த பின் கர்ணன் கௌரவர்களின் சேனாபதியாக அமைந்து யுத்தம் நடத்தினான்.



# வாழ்க்கைப் புயல்



ஸ்ரீமதி கமலா தேவி

"ராமு! ......"

"இதோ! ... வந்துட்டேன் ..."

ராமு ரூபாய் ஒன்றை எடுத்துக் கொடுத்தான்.

"இதில் வண்ணானுக்குப் பதினான்கணா கொடுத்து விடு; மீதி இரண்டணாவை நீ வாங்கிக் கொள் ..."

"சரி" என்று வாங்கிக் கொண்டாள் கமலா. ராமு ஆபீஸுக்குக் கிளம்பினான்.

"ஞாயிற்றுக்கிழமை கூடவா ஆபீஸ்?" என்றாள் கமலா.

"வேலை இருக்கிறது" என்று சொல்லி விட்டுக் கிளம்பினான் ராமு.

ராமு உண்மையிலேயே கமலாவை தன் அன்பென்னும் மாளிகையில் வைத்திருந்தான். கலியாணமாகி ஒரு வருஷமாகத் தனிக் குடித்தனம். அவனுக்குச் சம்பளம் ரூபா நாற்பதுதான். இதற்குள் கமலாவிற்குச் சோப்பு, ரிப்பன் முதலியவை வாங்கிக் கொடுத்து அவளைச் சந்தோஷப்படுத்துவான் ராமு. கமலாவிற்கும் ராமுவைக் கண்டால் மிகவும் பிடித்தம். இந்தக் கலியாணம் கூட அவள் இஷ்டப்படியேதான் நடந்தது.

அவன் போன பிறகு காப்பியைக் கலந்து குடித்தாள். அலமாரியில் உள்ள புத்தகங்களை எடுத்துப் படித்தாள். அப்பொழுது "கமலா!..." என்று குரல் கேட்டது. திரும்பினாள். எதிர் வீட்டுப் பெண் சரஸ்வதி வந்து அழைத்தாள். அவளுடன் கமலா சென்றாள். அங்கே புதிய தினுசுக் கண்ணாடி வளையல் வந்திருந்தது.

"கமலா! இதோ, இந்த ஜோடி பதினான்கணா!" என்று சரசு ஒரு ஜோடி வளையல்களை எடுத்துக் காண்பித்தாள். பார்த்ததும் கமலாவிற்கு அதை வாங்க வேண்டுமென்று ஆவல். ஆனால் பணம்?

கமலாவிற்கு ஒன்றும் புரியவில்லை. இப்படியும் அப்படியும் திருப்பிப் பார்த்து விட்டு, "வேண்டாம்" என்று திருப்பிக் கொடுத்தாள்.

அதற்குள், "ஏன், இது நன்றாக இல்லையா?" என்றாள் சரசு.

"இல்லை" என்று கமலா விழுங்கினாள்.

ராமு கொடுத்த ரூபாய் ஒன்றுதான் அவளிடம் இருந்தது. அதுவும் ராமு அன்று காலையிலேயே பணமில்லையென்று சொல்லியிருக்கிறான். தேதியோ இருபத்தேழு. முதல் தேதி வந்தால்தான் இனிமேல் பணம். வண்ணானுக்குப் பதினான்கு அணா கொடுக்க வேண்டும். இந்தச் சமயத்தில் ஒரு ரூபாய்க்கு வளையல் போட்டுக் கொண்டால் அவர் என்ன நினைப்பார்?

"இந்த வளையல் பத்து அணா!" என்று வளையல்காரன் இன்னொரு ஜோடி வளையல்களை எடுத்துக் காண்பித்தான்.

"பத்து அணாவிற்கு அது ஒன்றும் நன்றாக இல்லை. அணா நாலு கூடப் போனாலும் இதுதான் நன்றாக இருக்கிறது" என்றாள் அருகில் இருந்த லக்ஷ்மி.

கமலா அதையும் எடுத்துப் பார்த்தாள். அவளுக்கு எப்படியாவது வளையல் வியாபாரத்திலிருந்து விடுபட்டு விட்டால் போதுமென்று தோன்றியது. "என்னிடம் பணமில்லை" என்று சொல்லவும் அவளுக்கு இஷ்டமில்லை.

"இது வேண்டாம்" என்று மெதுவாகத் திருப்பிக் கொடுத்தாள் கமலா.

"பணம் இப்பொழுது கொடுக்காவிட்டால் பரவாயில்லை ... ஒரு வாரம் கழித்துக் கூட ..." என்று வளையல்காரன் திருப்பி வாங்காமல் சொன்னான்.

"இது வேண்டாமென்றால் பத்து அணா ஜோடியையே வாங்கிக் கொள்ளேன்! என்ன தயக்கம் ...?" என்றாள் சரசு.

"அகத்துக்காரரைக் கேட்டுச் செய்ய வேண்டும்போலிருக்கு!" என்று ஒரு குரல் கேட்டது அவள் காதிற்கு.

"ஆம்படையானும் பெண்டாட்டியும் ரொம்பச் சிக்கனம். கமலாவா இதை வாங்குவாள்?" என்றாள் காமாக்ஷி.

கமலாவிற்குச் 'சுருக்' கென்றது.

"இல்லை. வளையல் விரிசல் விட்டிருக்கிறதே யென்று பார்க்கிறேன். அவ்வளவு தான்! வேறு இருக்கிறதோ, இல்லையோ என்று யோசிக்கிறேன். எல்லாரும் இந்த மாதிரி போட்டுக் கொள்ளும்போது நான் மட்டும் வேறு மாதிரியா..."

நல்ல வேளை! கையில் இருந்த வளையல் விரிசலாக இருந்தது. பொய்ச் சாக்குச் சொல்லிச் சமாளித்துக்கொண்டாள் கமலா.

"நல்லோ! அது வேண்டாம். இதோ..." என்று வளையல்காரன் வேறு ஜோடி எடுத்தான்.

வேறு வழியில்லாமல் கமலா அந்த வளையல்களை வாங்கிக் கையில் போட்டுக் கொண்டு, முகத்தில் சிரிப்பையும் வரவழைத்துக் கொண்டாள். "எப்படியிருக்கிறது......?" என்று கேட்டாள் சாசவிடம் லக்ஷ்யமில்லாமல். இதற்குள் வளையல்காரன் கடையைக் கட்ட ஆரம்பித்து விட்டான்.

"இதோ, வந்துவிடுகிறேன்......" என்று 'திடு திடு' வென்று வீட்டிற்குப் போய்ப் பெட்டியைத் திறந்து, அந்த ஒரு ரூபாயை எடுத்து வந்து வளையல்காரனிடம் வீசி எறிந்தாள்.

சாயந்திரம் முதற்கொண்டே அவளுக்கு என்னமோ மாதிரி யிருந்தது. ராத்திரி கணவன் வந்ததும் என்ன சொல்வது?

"நான் ஒன்று சொல்லுகிறேன், கோபிக்கக் கூடாது" என்று ஆரம்பிக்கவேண்டும்.



"என்ன?" என்று கேட்பார். "நீங்கள் கொடுத்த ரூபாய்க்கு வளையல் வாங்கிப் போட்டுக் கொண்டேன்" என்று சொல்ல வேண்டும்; சொல்லி விட்டு மன்னிப்புக் கேட்கவேண்டும். ஒரு வேளை கோபித்துக் கொண்டால்......?

இல்லை, வந்து சாப்பிட்டு வெற்றிலை போட்டுக் கொண்டு படுக்குமுன், சந்தோஷமாக இருக்கும்போது சொல்லுவது தான் சரி. ஆனால் பரிமாறும்போது வளையல் 'பளிச்'சென்று தெரிந்து விட்டால்...? எடுத்து வைத்துவிடலாமா? சே, சே!

இந்தச் சமயத்தில் "கமலு!" என்று கதவைத் தட்டினான் ரகு. திடுக்கிட்டு வந்து கதவைத் திறந்தாள் கமலா.

"பியூன் வந்து தபால் கொடுத்தானா?" என்று கேட்டான்.

"இல்லை; இதுவரைக்கும் வரவில்லை" என்றாள் கமலா.

இந்தச் சமயத்தில் "ஸார்!" என்று ஒரு குரல் கேட்டது.

"குப்புசாமியா......?"

"ஆமாங்க! இன்ஸ்பெக்டர் ஐயா உங்களைக் கையோடே வந்துட்டுப் போகச் சொன்னாரு."

ரகு 'சரி' என்று தபாலை வாங்கி மேஜையில் வைத்துவிட்டு, "கமலா! தட்டம் வை. நான் போகணும்" என்றான்.

அவன் எப்பொழுதும் போல்தான் அன்புடன் பேசினான். ஆனால் கமலாவிற்கு இன்று ஏதோ அவன் வேறு மனுஷன் மாதிரி தோன்றிக்கொண்டே யிருந்தது.

ரகு சாப்பிட்டு முடித்தான். கை அலம்பி விட்டு, "கமலு! கதவைச் சாத்திக்கோ! நான் போய்விட்டு சீக்கிரம் வந்துவிடுகிறேன். நீ சாப்பிட்டுவிட்டுப் படுத்துக்கொள். பாக்கிக் காரியமெல்லாம் நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாம். நான் போகட்டுமா?" என்று கேட்டான் அன்பாக.

"சீக்கிரம் வந்துடுங்கோ! ரொம்ப இருட்டா யிருக்கிறது. செருப்புப் போட்டுண்டு போங்கோ" என்றாள் கமலா.

சாப்பாட்டை முடித்துக்கொண்டு பாலையும் எடுத்துக் கொண்டு படுக்கையறைக்குள் சென்றாள். மெத்தையை விரித்தாள். வீதிக் கதவைத் தாழ்ப்பாளிடாமல் படுத்தாள்.

"கமலு!......"

கதவைத் தட்டினான் ரகு. கமலா திடுக்கிட்டெழுந்தாள். பாலை எடுத்துக் கொடுத்ததும், ரகு சாப்பிட்

டான். மெதுவாக, "என்னை மன்னிக்கணும்" என்றாள் கமலா.

"ஏன்?" என்றான்.

நடந்ததைச் சொன்னாள். ரகுவின் முகத்தில் பலகோடி கோணல்கள் தோன்றின.

"தெரியாமல் செய்துவிட்டேன்……"

"தெரியாமலா! சாயங்காலம் மெனக்கெட்டுச் சொல்லிவிட்டுப் போயிருக்கிறேன். என்னிடம் வேறே காசுகூட இல்லை; வண்ணான் வருவான், காலைக்கு…"

"உங்களைக் கலியாணம் செய்துகொண்ட நான் ஒரு ரூபாய் செலவு செய்யப் பாத்தியமற்றவளா? ஏதோ செலவு செய்துவிட்டேன்."

அவனுக்கு வேப்பாகக் கசந்தது இவ் வார்த்தைகள்.

"என்னைக் கேட்காமல் ……… என்ன தைரியம், என்ன துணிச்சல்?"

"கேவலம், ஒரு ரூபாய்! இதற்கா……?"

"கேவலம், பிச்சைக் காசுதான்! அதை ஏன் தொட்டாய்?"

"பிச்சைக் காசு…ஏன் தொட்டாய்…?" கேள்வியைப் பார்? பெற்று வளர்த்துக் கிளியைக் கூண்டில் அடைத்து விற்றுவிடுவதுபோல் இந்த மாதிரி ஆசாமிகளிடம் பெண்களைக் கொடுத்து விட்டால் இப்படித்தான்!

இந்தமாதிரி யோசனை செய்தாள் கமலா. ரகு அன்று தூங்கவில்லை. படுக்கையைச் சுருட்டிக் கொண்டு வீதித் திண்ணைக்குப் படுக்கப் போய்விட்டான்.

* * *

மறுநாள் காலை ஏழரை மணி. கமலா காப்பி கொண்டுவந்து கொடுத்தாள். ரகு குடித்துவிட்டு வெளியே போனான். கமலா, ரகு ஒரு வேளை சாந்தமாயிருப்பான் என்று நினைத்தாள். சமையல் செய்து முடித்தாள். பத்து மணிக்கு வீடு வந்து சேர்ந்தான் ரகு. அவசரமாகக் குளித்துவிட்டுச் சட்டையை மாட்டிக் கொண்டான். கமலா தட்டை வைத்துவிட்டுச் சாப்பிட அழைத்தாள்.

கோட்டை மாட்டிக் கொண்டே, "எனக்குச் சாப்பாடு வேண்டாம்; நீயே சாப்பிடு…" என்று ஆபீசுக்குக் கிளம்பினான். கமலாவிற்கு வெறுப்பு ஏற்பட்டது. என்ன சுபாவம்! மனைவி என்பது சொன்னபடி ஆட்டிவைக்கும் விளையாட்டுப் பொம்மையா? சரிதான்; எவ்வளவு தூரம் இந்தக் கூத்து நடக்கிறதென்று பார்க்கலாம்.



வியாபாரி:—ஸார், தலை மயிர் வளரும் தைலம் இருக்கு. எடுக்கட்டுமா? பார்க்கிறீங்களா?

வீட்டுக்காரர்:—நீ முதலில் உன் தலைப் பாகையை எடு; உன் தலையைப் பார்க்கிறேன்.

---

அன்று கமலாவின் தங்கைக்குக் கலியாணம் நிச்சயமாயிருக்கிறதென்றும், புறப்படத் தயார் செய்துகொள்ள வேண்டுமென்றும் அவளது தந்தையிடமிருந்து கடிதம் வந்திருந்தது.

ரகு வீட்டில் சாப்பிடுவதில்லை. ஹோட்டலில் சாப்பிட்டு வந்தான். வெளியில் எல்லாரும் சண்டையென்று அறியக் கூடாது என்று வீட்டிற்கு வந்து கொண்டிருந்தான். திண்ணையில்தான் படுக்கை. காலையில் எழுந்ததும் குளிப்பான்; கோட்டை மாட்டிக்கொண்டு ஆபீஸுக்குக் கிளம்பி விடுவான். இப்படியே தினசரி நடந்து வந்தது.

அன்று காலை எட்டு மணி. கமலாவின் தகப்பனார் வண்டியில் வந்து இறங்கினார். ரகு அவரை வரவேற்றான்.

"நான் எழுதின கடிதம் வந்ததோ?…" மங்களூரிலிருந்து மீனுவும் நேற்று வந்துவிட்டாள். கமலாவை அழைத்துக்கொண்டு போகலாம் என்று வந்தேன். உனக்கு லீவு இருக்கோ இல்லையோ, கிடைக்குமோ, கிடைக்காதோ? கமலாவை இப்பொழுது அழைத்துக்கொண்டு போனால் நீ முகூர்த்தத்தின்போது வரலாம் என்று வந்தேன்…"

'சரி' என்பதுபோல் ரகு தலையசைத்தான். கமலா காப்பி கொண்டுவந்து கொடுத்தாள்.

"கமலா! எல்லாம் தயாராகத்தானே இருக்கே?…"

"என்னையா கேக்கறேள்! ஓ! அவர் பத்து நாளைக்கு முன்பே என்னை அனுப்பிவிடத் தயார் செய்து விட்டாரே…!"

இது ரகுவிற்குச் 'சுருக்'கென்று தைத்தது.

"அப்படியா? … ரொம்ப சந்தோஷம். ஏதோ நம்ப அதிர்ஷ்டம். இந்தமாதிரி

ஆம்படையான் உனக்கு வாய்த்தது......... நான் மத்தியானம் குழந்தையை அழைச்சுண்டு போறேன். நீ கட்டாயமா வா. ஞாயிற்றுக்கிழமை காத்தாலே வந்துடு. முகூர்த்தம் புதன்தானே?— பார்த்துக்கலாம்......"

"சரி...நேரமாயிடுத்து ... ஆபீஸுக்குப் போகணும்......" என்றான் ரகு.

"ரகு! சாப்பிடல்லே? கமலா! சமையல் ஆகவில்லையா?......"

ரகு பேசவில்லை. கமலா அதற்குள், "இல்லை. அவருக்கு இன்னிக்குச் சிநேகிதனாத்திலே விருந்தாம்!" என்றாள்.

"சரி, நான் மத்தியானம் வண்டிக்குக் குழந்தையை அழைச்சுண்டு போறேன். ஞாயிற்றுக்கிழமை கட்டாயம் நீ வந்துடு."

ரகு கோட்டை மாட்டிக்கொள்ள உள்ளே சென்றான். அவனுடன் கமலாவும் சென்றாள்.

"நான் போய்விட்டு வரேன். மறந்துடக் கூடாது. மன்னிக்கணும். உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளணும்' என்று சொல்லிக் கொண்டே கமலா, ரகுவின் பாதங்களைத் தொட்டு நமஸ்கரித்தாள்.

ரகு பேசவில்லை. வாய் ஏதோ முணுமுணுத்தது. அவ்வளவுதான். மத்தியானம் வண்டியில் கிளம்பிவிட்டாள் கமலா.

நாட்கள் சென்றன. அவனுக்கு வாழ்க்கை ஓர் காரிருள் சூழ்ந்த காடாகத் தோன்றியது. ஆபீஸிலிருந்து வீடு திரும்பினால் வீட்டில் போட்டது போட்டபடி இருக்கும். லக்ஷ்மி தாண்டவமாடிய இல்லத்தில் இன்று எங்கும் சூன்யமாய் நிசப்தத்துடன் இருந்தது.

* * *

"கமலா! மணி நாலு ஆச்சு! வெடித்தால் சுமங்கலிப் பிரார்த்தனை. என்ன தூக்கம்?" என்றாள் அன்னை.

மணி ஆக ஆகக் கமலாவிற்கு மனது ஏதோ குஷியாகத் தோன்றியது.

ஆமாம்! இன்றிரவு எட்டு மணி வண்டியில் 'அவர்' வந்து விடுவார் என்று இருந்தாள்.

வந்ததும் ...... என்று நினைக்கும் போதே சந்தோஷம் தலைக்கு மேல் ஏறி விட்டது. ரகு எட்டு மணிக்கு வந்து சேர்ந்தான். அன்று முகூர்த்த நாள். பத்து மணிக்கு முகூர்த்தம். எல்லாம் விமரிசையாக நடந்தது. சாயந்திரம் ரகு, மாமாவிடம், "நான் போய்விட்டு வருகிறேன்" என்றான்.

"நாளைக்கு லீவு இல்லையா? அப்படியானால் சரி; கமலாவை அடுத்த வாரம் கொண்டுவந்து விடுகிறேன்."

"சரி" என்று திரும்பினான்.

ஜன்னல் கம்பிகளின் இடுக்கில் தன்னை இரண்டு கண்கள் கவனித்ததை அவன் அறியவில்லை. ஏதோ ஒரு காரியம் செய்யத் தவறியதாக மட்டும் அவன் மனம் எண்ணிற்று. கல்யாணத்தில் ஒரு தடவைகூட அவனுடன் பேசவில்லை. அவன்தான் வந்து கேட்பது தானே? இந்தப் பெண்களுக்கே கர்வம் அதிகம்தான். பிறந்த வீட்டில் அதிகாரம் செலுத்துகிறாப் போலே இருக்கு என்று நினைத்தான் ரகு.

ரகு திரும்பி வந்து சேர்ந்தான்.

• • •

"ஸார்! தபால்!"

காலை எட்டு மணி. ரகு கடிதத்தைப் பிரித்துப் படித்தான். நாளை சாயந்திரம் கமலாவை அழைத்து வருகிறேன் என்று மாமாவிடமிருந்து வந்த கடிதம் அது.

மணி இரண்டு ஆகிவிட்டது. இன்று வெள்ளிக்கிழமை. சாயந்திரம் கோவிலுக்குப் போவோம் என்று நினைத்தான். மாலை ஏழு மணிக்குக் கோவிலுக்குக் கிளம்பினான். போய்விட்டுத் திரும்பினான். ஆனால் என்ன செய்தாலும் கமலாவின் ஞாபகம்தான் திரும்பத் திரும்ப வந்தது. அது ஏன் என்று அவனுக்கே தெரியவில்லை.

மறுநாள் மாலை மணி ஆறு. மாமா கமலாவுடன் வண்டியில் வந்து இறங்கினார். வந்ததும் ரகு எதிர்கொண்டு வரவழைத்தான். சட்டென்று கமலா பின்கட்டிற்குச் சென்று குமுட்டியைப் பற்ற வைத்தாள்.

இரவு எட்டு மணி. வெளியே போன ரகுவும் அவன் மாமனாரும் வீட்டுக்குத் திரும்பினார்கள்.

கமலா இலையைப் போட்டாள். "ரகு! வா" என்று மாமா அழைப்பதைத் தடுக்க முடியவில்லை. பேசாமல் சாப்பிட்டான்.

கமலா சாப்பிட்டு விட்டு, பின்கட்டுக் காரியத்தை முடித்துக்கொண்டு கையில் பாலுடன் வந்தாள்.

ஜமக்காளம், தலைகாணி எல்லாம் அப்பாவிற்கு எடுத்துக் கொடுத்தாள். கட்டிலில் தன் மெத்தையை விரித்தாள். ரகுவின் மெத்தை அப்படியே இருந்தது.

வீதியில் பேசிக் கொண்டிருந்தவர்கள் உள்ளே வந்தார்கள்.

"ரகு! மணி பதினொன்று ஆயிடுத்து; நீ படுத்துக்கொள். விடியற்காலம் ரயிலுக்குப் போயிட்டு வரேன். மீனுகூட அடுத்த வாரம் இங்கே வருவா. அடிக்கடி கடிதம் போடு" என்று சொல்லிப் படுத்தார்.

ரகு உள்ளே அறையில் நுழைந்தான். கமலு தன் மெத்தையை மட்டும் விரித்துப் படுத்திருப்பதைக் கண்டான். அருகில் தன் மெத்தை விரிக்காமல் இருப்பதைக் கண்டு அவனுக்குக் 'குப்' பென்று வியர்த்து விட்டது.

"என்ன போக்கிரித்தனம்! ...... சே! நிர்மலமான முகத்தில் ஒரு சூதும் தெரியவில்லையே!"

அலமாரியில் பால் அப்படியே இருந்தது. "ஒரு வேளை தூங்கி விட்டாளோ?" — அவன் யோசனை முடிவு பெறவில்லை.

"பால் அப்படியே இருக்கே! அவளை எழுப்பவா? சே!"

பேசாமல் படுக்கையை எடுத்துக்கொண்டு திண்ணைக்குப் போய்விடவா? ஆனால் மாமா என்ன நினைப்பார் பேசாமல் மெத்தையைக் கீழே விரித்தான். சுவாமி படத்தருகில் சென்று கைகூப்பினான்.

கமலுவிற்குப் பரிதாபமாக இருந்தது.

திரும்பினான். கமலு நின்றிருப்பதைக் கண்டு திடுக்கிட்டான். ஒருவரை யொருவர் இமை கொட்டாது பார்த்து நின்றனர்.

"கமலு! எல்லாம் என் தப்புத்தானே?"

"இல்லை, இல்லவே இல்லை. என் தப்புத்தான். இனிமேல் நான் ஒழுங்காக இருக்கிறேன். என்னை மன்னித்து விடுங்கள்."

அவள் கண்களில் நீர் வழிந்தது.

"சே, அசடு! இந்தா என்னைப் பாரேன்" என்று அவளது கண்ணீரைத் துடைத்துக் கொண்டே அலமாரியில் டம்ளர் அடியில் இருந்த மல்லிகைச் செண்டை எடுத்துக் கொடுத்தான். கமலாவிற்குச் சிரிப்பு வந்து விட்டது.

"நேற்றுக் கோவிலுக்குப் போயிருந்தேன். அங்கு கொடுத்தது."

கமலுவிற்கு நாணத்தால் முகம் சிவந்து விட்டது.

கீழே இருந்த படுக்கையை எடுத்துக் கட்டிலின்மேல் விரித்தாள்.

பாலைக் கொண்டு வந்து கொடுத்தாள்.

"எனக்கா?" என்றான் ரகு.

"ஆமாம்! அது மட்டுமில்லை. இது கூடத்தான்!" என்று மடியில் கை வைத்தாள்.

ஒரு ரூபாய்!

"கமலு!"

அவள் பேசவில்லை. தன் நினைவை இழந்து நாணத்துடன் தலை குனிந்தாள்.

அருகில் உட்கார வைத்துக் கட்டுக் கடங்காமல் படர்ந்த கூந்தலைச் சரிப்படுத்தித் தன்னுடன் அணைத்துக் கொண்டான் ரகு. அப்பொழுது உலகமே இன்பமயமாகத் தோன்றியது கமலுவிற்கு.






# நாட்டியக் கச்சேரிகள்



சமீபகாலமாக, பரத நாட்டியக் கலைக்கு அமோகமான அதிர்ஷ்டம் அடிக்க ஆரம்பித்திருக்கிறது. இப்பொழுது நாட்டியப் பள்ளிக்கூடம் இல்லாத ஊரே இல்லை. எவ்வளவோ குடும்பங்களில் பெண்களுக்குப் பரத நாட்டியம் சொல்லிக் கொடுக்கிறார்கள். குழந்தைகள் கருத்தாகக் கற்றுக்கொண்டு எவ்வளவு அழகாக ஆடுகிறார்கள் என்பதற்குச் சமீபத்தில் சென்னையில் நடந்த பரதநாட்டிய அரங்கேற்றுபடிகளே உதாரணம். சமீபத்தில் மியூஸியம் தியேட்டரில் ஜகந்நாத பக்த சபை ஆதரவில் மயிலாப்பூர் பிரமுகர் ஸ்ரீ வி. ராஜம் அவர்களின் பேத்தியான குமாரி லலிதாவின் அரங்கேற்றம் வெகு விமரிசையாக நடந்தது.



கௌஸல்யா—கல்யாண சுந்தரவல்லி

ஏப்ரல் மாதம் 28-ம் தேதியன்று அதே இடத்தில் எழும்பூர் இந்திய லலித கலைக் கழகத்தின் ஆதரவில் குமாரிகள் கௌஸல்யா, கல்யாண சுந்தரவல்லி இவர்களின் நாட்டிய அரங்கேற்று வைபவம் நடந்தது. இரண்டு குழந்தைகளும் பந்தநல்லூர் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் சிஷ்யரான நாட்டிய கலாவிசாரத ஸ்ரீ சொக்கலிங்கம் பிள்ளையிடம் பரதநாட்டியம் பயின்றவர்கள். பந்தநல்லூர் நாட்டியத்திற்கே தனிச் சிறப்பாகவுள்ள விருவிருப்பையும், ஜதி வரிசைகளையும், துள்ளல் கழற்றல்களையும் இக்குழந்தைகளின் நாட்டியக் கச்சேரியில் பார்க்க முடிந்தது.



குமாரி லலிதா

ஒரு குழந்தை பதம் பாட, இன்னொரு குழந்தை அபிநயம் பிடித்தது. காதுக்கும் கண்ணுக்கும் ஒருங்கே விருந்தாயிருந்தது. முக்கியமாக, குறவஞ்சிப் பாடல்களில் ஒன்றான 'குடிசை வைத்து' என்ற பதத்துக்கு குழந்தைகள் வெகு நன்றாக அபிநய நடனம் செய்தார்கள். மேற்படி இரு குழந்தைகளும் மேலும் மேலும் படிப்படியாக முன்னேறி நாட்டியக் கலையின் சிகரத்தை அடைவார்களென்று நம்புகிறோம்.

# அது என்ன கடிதம்?

வி.எஸ்.ஆர்.

கிணற்றங்கரையில் இருந்த ஒரு கல்லில் உட்கார்ந்து கொண்டிருந்த மாலதியின் புடவை நனைந்திருந்தது. ஜலம் கொட்டி விட்டதால் அல்ல; கண்களிலிருந்து பெருகிய நீர்தான் புடவையை நனைத்திருந்தது. அத்தனை நாளாய் மாலதி தேக்கி வைத்திருந்த துக்கம் எல்லாம் அப்பொழுது கண்ணீராகப் பீறிட்டு வந்தது.

மாலதி ஒரு ஏழை வீட்டுப் பெண் தான். பத்து வகுப்பு வரையில் படித்தவள். அவள் கணவன் நடராஜன் வைத்தியப் பரீட்சை எழுதி முடித்திருந்தான். நடராஜன் தாயார், தகப்பனார் எல்லோரும் படித்தவர்கள். உயர் குடும்பத்தவர்கள். ஆகையால் தன்னை நன்றாய் நடத்துவார்கள் என்று நினைத்துத்தான் மாலதி கல்யாணத்துக்குச் சம்மதித்தாள். சில பட்டிக்காட்டு மாமியார்கள் நாட்டுப் பெண்களைக் கஷ்டப் படுத்துவது போல் தன்னை நடத்தமாட்டார்கள் என்று எண்ணினாள்.

அவள் நினைத்தது ஒரு விதத்தில் சரியாய்த்தான் போயிற்று. மிருதுபாஷிணி அம்மாளுக்குச் சாதாரணமாக மாமியார்கள் கையாளும் முறை மகா கர்நாடகமாகவும் மகா அவலட்சணமாகவும் தோன்றியது. ஆகவே அவள் பல நவீன முறைகளைக் கையாண்டு நாட்டுப் பெண்ணைக் கஷ்டப்படுத்தி வந்தாள். உதாரணமாக, காலையில் அலாரம் கடிகாரத்தில் ஒரு மணி நேரம் தள்ளி வைத்து விட்டு, நேரம் கழித்து எழுந்ததற்காக மாலதியைப் பழிப்பாள். வேலைக்காரிகளுக்கு அடிக்கடி லீவு கொடுத்து விட்டு மாலதி பிராணனை விட்டு வேலை செய்யும்படி செய்து விடுவாள். நடராஜன் வீட்டில் இருக்கும்போது மாலதியைப் புகழ்வது. அவன் வெளியில் போனதும் அவளை ஏசுவது—புருஷனிடம் புகார் சொன்னால்கூட அவன் நம்ப முடியாதபடி பல நவீன தந்திரங்களை உபயோகித்து மாலதியைப் பாடாய்ப் படுத்தி வந்தாள்.

மாலதி தன் கஷ்டத்தைச் சொல்லவும் முடியவில்லை; மெல்லவும் முடியவில்லை. நெஞ்சில் விஷமுள்ள துரோகிகளின் வீட்டை விட்டுப் போய்விடலாமா என்று அவள் அடிக்கடி நினைத்ததுண்டு; ஆனால் அவள் நடராஜனை நினைத்துக் கொண்டதும் அவ்வாறு செய்யத் துணியவில்லை. நடராஜன் மாலதியைப்போலவே சாந்த சுபாவமுள்ளவன். அதிர்ந்து ஒரு வார்த்தை பேசமாட்டான். மாமியாருக்காகப் பயந்து கொண்டு வீட்டை விட்டு ஓடிவிட்டால் கணவன் உள்ளம் உடைந்து விடுமே என்று எண்ணினாள்.

கிணற்றடியில் உட்கார்ந்து வெகு நேரம் மாலதி யோசித்தாள். கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தவள்போல் தோன்றினாள். விரு விரு வென்று எழுந்து கணவன் அறைக்குள் போனாள். பிறகு, ஒரு கடிதத்தை எடுத்து அதில் பின்வருமாறு எழுதினாள். அந்தக் கடிதத்தை எழுதும் போதே, அவள் கண்களில் நீர் பெருகிறது.

“அன்புள்ள என் கணவருக்கு,
இந்தக் கடிதம் தங்கள் கைக்குக் கிடைக்கும்போது நான் வெகு தூரம் போயிருப்பேன். நானே அனாதை. நான் எங்கே போகிறேனென்று எனக்குத் தெரியாது. இந்த முடிவுக்குக் காரணம் நான் அல்லவென்றும் தங்கள் தாயார்தான் என்றும் தாங்கள் ஊகிக்கக்கூடும்.

மாலதி.”

பலதடவை மாலதி இந்தக் கடிதத்தைப் படித்து விட்டு, நடராஜன் வந்ததும் அவன் கண்ணில் படும்படி மேஜையின் மீது வைத்தாள். இந்தக் கடிதத்தைப் படித்ததும் கணவன் மனம் என்ன பாடு படும் என்பதை நினைக்க அவள் ஹிருதய ஓட்டமே நின்று விடும் போலிருந்தது. கடிதத்தைப் படித்ததும் அவள் கணவன் ஒருவேளை மூர்ச்சையாகி விடலாம். அல்லது ‘மாலதி, மாலதி!’ என்று கத்திக்கொண்டு சினிமாவில் வருவது போல், தெரு வழியாக ஓடி வரலாம். அல்லது மனம் வெறுத்துப் போய்ச் செய்யத் தகாத காரியத்தைச் செய்து விட்டால்? அவர் டாக்டராச்சே, விஷம் கிஷம் எதாவது எடுத்து.........

சட்டென்று ஒரு நினைவு வந்தது. இந்த ஆண்பிள்ளைகளையே நம்பக்கூடாது என்பார்களே, அதுமாதிரி கடிதத்தைப் படித்து விட்டு, “தொலைந்தது சனியன்!” என்று ஒருவேளை ஆனந்தப் படுகிறாரோ என்னவோ! பளிச்சென்று அவளுக்கு ஒரு வேடிக்கையான எண்ணம் தோன்றியது. இப்படிச் செய்தால் என்ன? அந்தக் கடிதத்தைப் படித்துவிட்டு என்ன செய்கிறார்

என்றுதான் பார்க்கலாமே என்று நினைத்தாள். அறையைச் சுற்றுமுற்றும் பார்த்தாள். ஒரு மூலையில் ஒரு கட்டில் இருந்தது. அந்தக் கட்டிலுக் கடியில் சென்று ஒளிந்து கொண்டாள் மாலதி. அப்பொழுது மாமியார் பேரில் இருந்த கோபம் ஆத்திரம் எல்லாம் மறைந்து விட்டது. கணவன் மனதைப் பரிசோதிக்க வேண்டும் என்ற எண்ணமே மேலோங்கி யிருந்தது.

நடராஜன் சிறிது நேரம் கழித்து உள்ளே வந்தான். வந்தவன் மேஜைமீதிருந்த கடிதத்தைப் படித்தான். அவனுக்கு ஒரு கணம் ஒன்றுமே புரியவில்லை. அப்படியே மலைத்து நின்றுவிட்டான். பிறகு நெருப்பை மிதித்துவிட்டவன் போல் துடியாய்த் துடித்தான். அருகிலிருந்த கட்டிலில் உட்கார்ந்து கொண்டு பலமாக யோசனை செய்தான். இதையெல்லாம் மாலதி ஒளிந்து கொண்டிருந்தபடியே கவனித்தாள். அவள் கண்களில் ஜலம் ததும்பியது. மாமியாருக்குப் பயந்து கொண்டு இவ்வளவு அன்புள்ள கணவனை விட்டுப் போக நினைத்தேனே, என்ன மடத்தனம் என்று நினைத்தாள்.

யோசனை செய்துகொண்டு உட்கார்ந்திருந்த நடராஜன் சட்டென்று எழுந்து போய் மேஜையிலிருந்த ஒரு கடிதத்தை எடுத்து ஏதோ எழுதினான். பிறகு அதை மேஜைமேல் வைத்துவிட்டுச் சட்டென்று வெளியே போய் விட்டான்.

மாலதி கட்டிலுக் கடியிலிருந்து வெளியே வந்தாள். அவள் மனம் 'திக் திக்' கென்று அடித்துக் கொண்டது. அந்தக் கடிதத்தில் என்ன எழுதியிருப்பார்! அவள் வேடிக்கை செய்ததே வினையாகப் போய்விடுமோ? மாலதி ஓட்டமாக ஓடி மேஜையிலிருந்த கடிதத்தைப் பார்த்தாள். அதில் சில வரிகளே எழுதியிருந்தது. அது என்ன?

''அருமை மாலதிக்கு,

உன்னைப் பிரிந்திருப்பது ரொம்பக் கஷ்டம்தான். நீ எங்கே போனாலும் நானும் உன் கூடவே வருவேன். நீ இருக்கும் இடத்தில் நானும் இருப்பேன். ஆனால் இப்பொழுது நீ இருக்கும் இடத்தில் ஒருவர்தான் இருக்க முடியும். அந்தக் கீக்கிடமான கட்டிலுக் கடியில் இரண்டு பேர் இருக்க முடியாது. போகட்டும்; உன்னை மறைத்துக்கொண்டாயே தவிர, உன் தலையிலுள்ள மல்லிகைப் பூவின் வாசனையை மறைக்க முடியவில்லையே!

நடராஜன்.''




அன்று மணி வழக்கம் போல் பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டுக்கு வந்து கொண்டிருந்தான். வழியிலே ராமு ஒரு அதிசயமான பந்தை வைத்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருந்தான். அந்தப் பந்தைக் கீழே விட்டால் போதும்; தானே உருண்டு ஓடும். அதைப்பார்த்த மணிக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. "ராமு, ராமு! இது உனக்கு ஏதுடா?" என்று கேட்டான்.

"என் அப்பா வாங்கி வந்து கொடுத்தார்!" என்றான் ராமு.

"எங்கேயிருந்து வாங்கிவந்தார்?"

"போடா, எனக்குத் தெரியாது!" என்று சொல்லிக் கொண்டே ராமு பந்தை எடுத்துக் கொண்டு வீட்டுக்குள் ஓடிவிட்டான்.

மணியின் மனம் தவியாய்த் தவித்தது. அந்தப் பந்து எங்கே விற்கும்? என்ன விலையிருக்கும்? நாம் இதுவரை எங்கேயும் பார்க்காத பந்தாயிருக்கிறதே! கீழே விட்டதும் தானாக அல்லவா ஓடுகிறது? வீட்டுக்குப் போனதும் அப்பாவிடம் முதல் காரியமாக இந்தப் பந்தைப் பற்றித்தான் சொல்ல வேண்டும். அம்மாவிடம் சொல்லி, அப்பாவை உடனே வாங்கிக் கொண்டு வரும்படி செய்யவேண்டும். அப்பா வாங்கிக் கொண்டு வந்து கொடுத்ததும், நேரே ராமுவிடம் வந்து, "இதோ, பாருடா! நேற்று என்னமோ இல்லாத பெருமையெல்லாம் அடித்துக் கொண்டாயே? நீ எங்கே விற்கிறது என்று சொல்லாவிட்டால் என் அப்பாவுக்கு அந்தப் பந்து விற்கும் இடமே தெரியாமல் போய்விடுமா? போடா, போ!" என்று சொல்ல வேண்டும். — இப்படியெல்லாம் எண்ணிக்கொண்டே மணி அன்று வீட்டுக்கு வந்து சேர்ந்தான்.

மணியின் அப்பாவும் அன்று பொழுதோடு வீட்டுக்கு வந்திருந்தார். அவர் கோட்டைக் கழற்றி மாட்டுவதற்குக் கூட அவகாசம் கொடுக்காமல், "அப்பா! ஓடும் பந்து, அப்பா!"— "அப்பா! ஓடும் பந்து, அப்பா!" என்று நச்சரிக்கத் தொடங்கி விட்டான் மணி.

"என்னடா அது, ஓடும் பந்து?" என்று அதட்டினார் அப்பா.

"பந்து அப்பா! தானே ஓடும் அப்பா!" என்றான் மணி.

"பந்தாவது, தானே ஓடுவதாவது! என்னடா உளறுகிறாய்?"

"ராமுகூட ஒன்று வாங்கி வைத்திருக்கிறான், அப்பா!"

"உம்...... எங்கே வாங்கினானாம்? விசாரித்தாயா?"

"விசாரித்தேன் அப்பா! சொல்லமாட்டேன் என்கிறான்!"

"கிடக்கிறான், பயல்! பஜாருக்குச் சென்று கேட்டால் எவனாவது கொடுத்துவிட்டுப் போகிறான்!"

"இன்றைக்கே வாங்கி வந்து தருகிறாயா, அப்பா!"

"ஆகட்டும்."

மணிக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. 'குதிகுதி' என்று குதித்தான். அவன் அப்பாவும் அன்று மாலையே 'ஓடும் பந்து' ஒன்று வாங்கிக் கொண்டு வருவதற்காகக் கடை வீதிக்குச் சென்றார். ஒவ்வொரு கடையாகச் சென்று "ஓடும் பந்து இருக்கிறதா?" என்று கேட்டுக்கொண்டே வந்தார்



ஒரு கடையிலாவது அந்த மாதிரிப் பந்து கிடைக்கவில்லை.

கடைக்காரர்கள் "இல்லை" என்று சொல்லி விட்டுப் பேசாமலிருந்தாலும் பாதகமில்லை. அவர்கள் மணியின் அப்பாவைப் பார்த்துச் சிரித்தார்கள். "பந்தாவது, ஓடவாவது" என்று சொல்லி நகைத்தார்கள். "என்னமோ அப்படி ஒரு பந்து இது வரை வரவில்லை, ஸார்! வந்திருந்தால் நாளை விசாரித்து வாங்கிக் கொண்டு வந்து வைக்கிறோம்; நீங்கள் நாளை கழித்து வாருங்கள்" என்றனர்.

**ம**ணியின் அப்பாவுக்குப் பைத்தியம் பிடித்து விடும்போல் இருந்தது. அவர் வீட்டுக்கு வெறுப்புடன் திரும்பி வந்தார். அவரைச் சற்றுத் தூரத்திலேயே பார்த்துவிட்ட மணி, ஒரே ஓட்டமாய் ஓடி வந்து, "அப்பா! பந்து எங்கே, அப்பா?" என்று ஆவலுடன் கேட்டான்.

"ஏண்டா, மணி! நீ எப்பொழுது இப்படிப் பொய் சொல்வதற்குக் கற்றுக் கொண்டாய்? நானும் ஒரு கடைகூட விடாமல் விசாரித்தேன்: ஒரு கடையிலாவது நீ கேட்ட பந்து இல்லையே?" என்றார் அப்பா.

"நானா அப்பா பொய் சொல்கிறேன்? நீ வேண்டுமென்றால் ராமுவின் வீட்டிற்கு வா, அப்பா! அவன் வைத்திருக்கிறான் பார், அப்பா!" என்றான் மணி.

இருவரும் ராமுவின் வீட்டிற்குச் சென்றனர். அப்பொழுது ராமு தெருவில் அந்த ஓடும் பந்தை வைத்துக் கொண்டு விளையாடிக் கொண்டிருந்தான். அதைப் பார்த்த மணியின் அப்பாவுக்கும் ஆச்சரியம் தாங்கவில்லை. நிஜமாகவே அந்தப் பந்து தானாக ஓடத்தான் செய்தது!

"அடே, ராமு! இந்தப் பந்தை உன் அப்பா எங்கேயிருந்து வாங்கி வந்தார்? அவர் இப்பொழுது வீட்டில் இருக்கிறாரா? அவரை விசாரிக்கலாம் என்று பார்க்கிறேன். நானும் விசாரிக்காத கடை இல்லை. ஒருவராவது "உண்டு" என்று சொல்லவில்லை. மணியோ என் பிராணனை வாங்கித் தொலைக்கிறான்!" என்று அலுத்துக் கொண்டார் மணியின் அப்பா.

"மாமா! இந்தப் பந்து எங்கேயும் விற்காது. மாமா! ஓடாத பந்து வேண்டுமானால் எங்கும் கிடைக்கும். இந்த ஓடும் பந்து நானே செய்தது. மாமா! இதோ, பாருங்கள்!" என்று சொல்லிக் கொண்டே ராமு அந்தப் பந்தின் வாயைத் திறந்தான்.

என்ன ஆச்சரியம்! அந்தப் பந்திலிருந்து ஒரு சுண்டெலி 'குடுகுடு' வென்று வெளியே ஓடி வந்தது!



தாயார்:— ஏண்டா மணி! இத்தனை பெரிய மாம்பழத்தைச் சாப்பிட்டாயானால் உனக்கு வயிற்றுவலிதான் வரும்!

பையன்:— வரட்டும் அம்மா! அதற்காகத் தான் சாப்பிடுகிறேன். நீ பொய்யே சொல்லக் கூடாதென்று சொல்லியிருக்கிறாயா, இல்லையோ?

தாயார்:— ஆமாம்; அதற்கும் நீ மாம்பழம் சாப்பிடுவதற்கும் என்ன சம்பந்தம்?

பையன்:— நாளைக்கு நான் வாத்தியாரிடம் வயிற்றுவலி என்று உண்மையைச் சொல்லி ஒரு நாள் லீவு வாங்கிக் கொள்ளப் போகிறேன், அம்மா!



# எரிகரும்பு

## ஒரு பிரசினை

கரியும் விறகும் அநேகமாக நம்மெல்லோருக்கும் இரண்டு
பிரச்சினைகளைக் கொடுக்கின்றன. அவைகள் கிடைப்பது
கஷ்டம். ஓரிடமிருந்து மற்றோரிடத்துக்கு கொண்டு
போவது சிரமம். ஆனால் ஒரு கெட்டில் தண்ணீர் கொதிக்க
வைத்து ஒரு கோப்பை டீ தயாரிக்க மிக குறைந்த எரி
கரும்பே தேவை. ஒரு கோப்பை நல்ல டீ செய்யும்
மாறுதல்களோ மிக அதிகம். கவலைகள் மறைந்து விடு
கிறது. சந்தேகங்கள் நீங்கு கின்றன. நீங்கள்
சந்தோஷமடைந்து திருப்தியுடன் உலகத்தோடு
சமாதானமாய் இருப்பீர்கள். அடுத்தமுறை
நீங்கள் இந்த கஷ்டமான யுத்தகாலத்தில்
வாழ்வின் சிரமத்தை உணரும் பொழுது
ஒரு கோப்பை டீ அருந்தி அது விளை
விக்கும் மாறுதல்களை கவனியுங்கள்






சோர்வடையும் சமயம் டீ அருந்துங்கள்

இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது.

IK 257 TM




மிக நேர்த்தியான மணமும், நல்ல நிறமும், குறைந்த விலையும் உள்ள லிப்டன்ஸ் தேயிலை பெண் தேயிலைகள் இதர தேயிலைகளை விட சிறந்தவை.




# லிப்டன்ஸ் தேயிலை பெண்

நேர்த்தியான இந்திய தேயிலை




### அதே விலை!

சிறுமி (பழக்காரியிடம்):— ஒரு பழம் என்ன விலை?

பழக்காரி:—ஒரு அணா.

சிறுமி:—டஜனாக வாங்கினால்?

பழக்காரி:—அதே விலைதான்!

சிறுமி (ரொம்ப சந்தோஷத்துடன் பழக்காரியிடம் ஒரு அணாவைக் கொடுத்து விட்டு):—அப்படியானால் எனக்கு ஒரு டஜன் பழம் கொடு! —ஜி. வி. ராஜன்.

★

### சிக்கனம்

கட்டுரை ஆசிரியர் (தாசில்தாரை நோக்கி):—ஐயா! தயவு செய்து எனக்கு இந்த மாதம் இரண்டு காலன் மண்ணெண்ணெய்க்கு 'ஸ்பெஷல் பர்மிட்' கொடுங்கள்.

தாசில்தார்:—ஏன் ஐயா, இரண்டு காலன்?

க. ஆசிரியர்:—நான் 'மண்ணெண்ணெய் சிக்கனம்' என்பதைப் பற்றிப் பெரிய கட்டுரை ஒன்று இரவு பகலாய் எழுதப் போகிறேன்! —வி. சௌரிராஜன்.

★

### சரியான வழி

மனைவி:—இன்னொரு தடவை சமையலில் கோளாறு சொன்னீர்களானால் அந்த 'கர்ஸ்' செய்த மாதிரி பாதரசத்தைக் குடித்து, என் பிராணனை விட்டுவிடுவேன்!

கணவன்:—போ போ, அசடே! பாதரசமென்ன! தோசமென்ன? நீ செய்யும் பருப்பு ரசத்தில் ஒரு வாய் குடித்தால் போதாதா? —வி. என். ராமன்.

★

### அபார யோசனை!

ஒருவர்:—ரயில் விபத்து ஏற்பட்டால் முதல் வண்டியில் பிரயாணம் செய்கிறவர்களுக்குத்தான் அபாயம் ரொம்ப அதிகம்.

நண்பர்:—அப்படியானால் அதை உத்தேசித்து ரயிலதிகாரிகள் முதல் வண்டியை எப்பொழுதுமே ஏன் எடுத்துவிடக் கூடாது? —ஜி. வி. கிருஷ்ணராஜன்.

### தகுந்த கூலி

துணி கொடுத்தவர் (தனக்குச் சட்டை தைத்துக் கொடுத்த தையற்காரரிடம்):—ஏன், அப்பா! எனக்குச் சட்டை தைக்க எட்டணா கூலி; என் பையனுக்குத் தைப்பதாயிருந்தால்?

தையற்காரன்:—நாலணா.

துணி கொடுத்தவர்:—சரி, அப்படியானால் இந்தா நாலணா!

தையற்காரன்:—என்னுங்க, அநியாயமாயிருக்குது! உங்களுக்குச் சட்டை தைத்துக் கொடுத்தால், பையனுக்குத் தைக்கிற கூலி கொடுக்கிறீங்களே!

துணி கொடுத்தவர்:—ஆமாம்; நீ எனக்கென்று தைத்துக் கொடுத்த சட்டை பையனுக்குத்தானே சரியாக இருக்கிறது? —என். ஏ. வி.

★

### தெரியாத விஷயம்

சாப்பிட வந்தவர்:—என்ன ஐயா, இது! நேற்றைய தினம் வடை நன்றாக இருந்தது; இன்று மகா மோசமாயிருக்கிறதே?

சர்வர்:—தெரியாமல் சொல்கிறீர்கள், ஸார்! நேற்றைய வடையேதான் இது! —எஸ். சங்கரசுப்ரமணியன்.

★

### அவர்கள் யார்?

டாக்டர் வீட்டுக்கு வந்த ஒருவர் அங்கு ஒரே கூட்டமாயிருப்பதைப் பார்த்துவிட்டு, "டாக்டர் ஸார்! ரொம்பக் காரியமாயிருக்காப்போலேயிருக்கு; நான் சாவகாசமாய் வந்து பார்த்துக் கொள்கிறேன். வரட்



டுமா?" என்று டாக்டரிடம் சொல்லிக் கொண்டே திரும்பினர்.

"சும்மா வாங்கோ, ஸார்! அவாளெல்லாம் என் ஆத்துக்காரியின் பிறந்தகத்து மனுஷா! மருந்து சாப்பிட வரவில்லை; விருந்து சாப்பிட வந்திருக்கா!" —எம். ஆர். சரோஜா





# அசடு வழிந்தது!

ஸ்ரீ சுத்தானந்த பாரதி

★

ஒரு நாள் காலையில் வேலைக்காரி பருவதம் கொல்லைக் கிணற்றில் தண்ணீர் இறைத்தாள். வாளியில் ஒரு பாத்திரம் வந்தது. அதைக் கண்டு பயந்து, "அம்மா! சூனியம்!! சூனியம்!!!" என்று கதறினாள். பாக்கியலக்ஷ்மியம்மாள் ஐயரை அழைத்துக் கொண்டு வந்தாள். ஐயர் பாத்திரத்தை உற்றுக் கவனித்தார். முத்திரை வைத்திருந்தது. அப்புறம் பார்த்தார். "சரி, அந்த ஆசாமிகள் வேலை!" என்று உடனே பாரதியார் முதலிய நண்பர்களை அழைத்து வந்து, பாத்திரத்தைத் திறந்து பார்த்தார். அடடா! எப்படிப்பட்ட சரக்குகளை மகானுபாவர்கள் மிகவும் ரகசியப்பட்டுச் சேர்த்திருக்கிறார்கள்! காளியின் படம்; அதற்கு ஒரு தலை பலி தருவதாக பாவனை. ஒரு அறிக்கை. அதில் பாட்டு வரிகள். சில புதுவை தேசபக்தர்கள் ஜாப்தா. ஒரு கத்தி. இவ்வளவும் அந்தப் பாத்திரத்தில் இருப்பிடித்துக் கொண்டிருந்தன.

ஐயர் அப்படியே பாத்திரத்தை மறைத்துக்கொண்டு பிரெஞ்சு சர்க்காரிடம் போனார். பருவதம், ஐயர் திரும்புகிற வரையில் வெளியே தலை நீட்டவில்லை. ஐயர் அழகாகப் பிரெஞ்சு பேசி, "ஏதோ நாங்கள் குடியாகப் பிரெஞ்சு ராஜ்யத்தில் அமைதியாயிருக்கிறோம் என்றால், எங்களை இப்படியெல்லாம் செய்கிறார்களே? இதிலிருப்பதெல்லாம் சுத்தப் பொய் இதற்கும் எங்களுக்கும் சம்பந்தமேயில்லை கிரிமினல் சட்டத்தின் இத்தனாவது செக்ஷன்படி!" என்றெல்லாம் வெளுத்து வாங்கினார். அதிகாரி, "நீங்கள் தைரியமாயிருங்கள். நாங்கள் பார்த்துக் கொள்ளுகிறோம்" என்று சமாதானம் சொல்லியனுப்பினார். பாத்திரம் சர்க்காரிடம் சேர்ந்தது ஒற்றருக்குத் தெரியாது.

ஒரு மணி நேரத்திற்கெல்லாம் தடதடவென்று போலீஸார் புகுந்தனர். "வீட்டைச் சோதனை போடுவோம்" என்றனர். "ஆஹா! தாராளமாகப் போடுங்கள்" என்றார் ஐயர் விநயமாக. மல்லார்ந்திருந்த சட்டிபானைகளெல்லாம் குப்புறக் கவிழ்ந்தன. இரகசியப் புலிகள் புத்தகப் பெட்டியை உதறி உதறிப் பார்த்தனர். ஒற்றர் எலிப் பொந்து எறும்புப் பொந்துகளையெல்லாம் கண்ணில் திரியிட்டுப் பார்த்தனர். மண்கூட அகப்படவில்லை. பருவதம் அவ்வளவு சுத்தமாக வீட்டைக் கூட்டியிருந்தாள்! "ஐயரே! நீர் புரட்சிச் சாமான்களைக் கிணற்றில் ஒளித்து வைத்திருப்பீர். கிணற்றை இறைத்துப் பார்ப்போம்" என்றனர். "ஆஹா! சந்தோஷம். எங்களுக்குத் தூர்வை எடுக்கப் பணம் கிடையாது. அந்த உதவி செய்தால் நல்லதுதானே" என்றார் ஐயர்.

ஆசாமிகள் கிணற்றை இறைக்கத் தொடங்கினர். இறைத்தனர். "பனா பனான்னு தெரியுதா?" என்றார் ஒருவர். "ஒன்றுமில்லேங்கிறேன்" என்றான் மற்றொருவன். இதற்குள் இன்னொருவன் நுழைந்தான். "அட, வீண் வேலை! சுத்தடா!" என்றான். ஒற்றர் முகத்தில் அசடு வழிந்தது. நண்பர்கள் விழுந்து விழுந்து சிரித்தனர். சிரிக்காதவர் ஐயர் ஒருவர் மட்டும்தான்! ஏன் சிரிக்கவில்லை? "ஐயோ! நமது தேசத்திலே இப்படி அசடுகளும் உண்டா?" என்றுதான்.

---

பியானோ வாசிப்பதில் உலகப் புகழ்பெற்ற பாத்ருஸ்கி தினம் பதினைந்து, பதினாறு மணி நேரம் சங்கீதப் பயிற்சி செய்வார். "இத்தனைக் கடினமான பயிற்சி எதற்கு?" என்று நண்பர் ஒருவர் கேட்டதற்கு, அவர் பின் வருமாறு பதில் அளித்தார்.

"நான் ஒரு நாள் பயிற்சி செய்யாவிட்டால், அதனால் ஏற்படும் வித்தியாசம் எனக்குத் தெரியும். இரண்டு நாள் பயிற்சி செய்யாமல் இருந்தால் அதனால் ஏற்படும் வித்தியாசம் விமர்சகர்களுக்குத் தெரியும். மூன்று நாள் பயிற்சி செய்யாமல் இருந்தால் அதனால் ஏற்படும் வித்தியாசம் என் வாசிப்பைக் கேட்க வரும் சாதாரண ஜனங்களுக்கே தெரிந்துவிடும்."



# கடவுளும், கடிதமும்

பகீரதன்

பணப் பெருக்கம் அதிகமாகி இருக்கும் இந்த நாளிலும், பணப் பெருக்கம் இல்லாத அந்த நாளிலும் பொன்னனுக்குக் கஷ்டம் தான். இருந்தாலும் ஏதோ அரை வயிற்றுக் கஞ்சி குடித்துக் கொண்டு வந்தான் அவன் எஜமானர் கருணையால். அந்த எஜமானரும் திடீரென்று நோய்வாய்ப் பட்டுவிட்டார்.

ஒரு மாசமாகப் பொன்னனுக்கு மன அமைதியே கிடையாது. எப்படியாவது தன் எஜமானர் உடம்பு செளகரியமாகி விட வேண்டும் என்று இரவு பகலாகக் கடவுளிடம் முறையிட்டான்.

கடைசியில் கடவுள் அவனைக் கைவிட்டு விட்டார். பொன்னனின் எஜமானர் கண்ணை மூடிவிட்டார்.

'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்று தன் மனதைச் சமாதானப் படுத்திக் கொண்டான் பொன்னன்.

அவனால் மனதைத்தான் தேற்றிக் கொள்ள முடிந்ததே ஒழிய வயிற்றுப் பசியை ஆற்றிக் கொள்ளவே முடியவில்லை. யார் யாரிடமோ வேலைக்கு அலைந்தான். வயதான அவனை வேலைக்கு வைத்துக் கொள்ள ஒருவரும் சம்மதிக்கவில்லை.

திடீரென்று அவனுக்கு ஒரு அருமையான யோசனை தோன்றிற்று. "எல்லாம் கொடுக்க வல்ல கடவுள் இருக்கும்போது, கவலைப்படுவானேன்?" என்று எண்ணி, கடவுளுக்கே ஒரு கடிதம் எழுதி, ஏதாவது பணம் அனுப்பச் சொல்வது என்று தீர்மானித்தான்!

அந்த ஊரில் உள்ள ஒரு படித்தவனைக் கெஞ்சி, தனக்கு ஒரு கடிதாசு எழுதிக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டான்; அவனும் சம்மதித்தான்.

பொன்னன், 'எல்லாம் வல்ல கடவுளுக்கு' என்று சொல்ல ஆரம்பிக்கும்போதே கடிதம் எழுதியவனுக்குச் சிரிப்பு வந்தது. என்றாலும் அதை ஒருவாறு அடக்கிக்கொண்டு கடிதத்தை எழுதி முடித்தான்.

அந்தக் கடிதத்தைத் தானே கொண்டு போய், தபால் பெட்டியில்கூட போடாமல் போஸ்ட்மாஸ்டரிடமே நேரில் கொடுத்து விட்டு வந்தான் பொன்னன்.

போஸ்ட்மாஸ்டர், 'எல்லாம் வல்ல கடவுள் சமூகத்துக்கு' என்றிருந்த விலாசத்தைப் பார்த்தவுடன் விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டே கடிதத்தைப் பிரித்துப்படித்தார்.

"ரொம்பக் கஷ்டமாயிருக்கிறது. ஏழைக்கு எப்படியாவது ஒரு நூறு ரூபாய் அனுப்பி வைத்தால் நல்லது" என்று அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தது. பொன்னனின் தெய்வ பக்தியையும், அறியாமையையும் நினைத்துப் போஸ்ட் மாஸ்டர் மிகவும் வருந்தினார்.

மறுநாள் பொன்னனுடைய கஷ்ட காலத்தையும், தெய்வ பக்தியையும் நினைத்துத் தன்னுடைய பணத்திலிருந்தே ஒரு ஐம்பது ரூபாயைப் போஸ்ட் மாஸ்டர் மணியார்டர் மூலம் அவனுக்கு அனுப்பிவைத்தார்.

ஐம்பது ரூபாய் மணியார்டர் வந்ததும் பொன்னனுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. கடவுளை வாயார வாழ்த்தினான்!

இரண்டு நாள் கழித்து, மறுபடியும் கடவுள் விலாசமிட்ட கவர் ஒன்று வந்திருப்பதைக் கண்ட போஸ்ட் மாஸ்டர் திகைத்துப் போய்க் கடிதத்தைப் பிரித்துப் படித்துப் பார்த்தார்:

"எல்லாம் வல்ல கடவுளுக்கு,

கடவுள் என்றால் நாங்கள்தான் கடவுள். ஏழைக்கு இந்தச் சமயத்தில் செய்த உதவியைப் பற்றி என்ன சொல்வது! ஆனால் ஒன்று. இனிமேல் எனக்குப் பணம் அனுப்பினால் எங்கள் ஊர் போஸ்ட்மாஸ்டர் மூலம் அனுப்ப வேண்டாம். நீங்கள் அனுப்பிவைத்த நூறு ரூபாயில் ஐம்பது ரூபாயைத் தான் எடுத்துக் கொண்டு, பாக்கி ஐம்பது ரூபாயைத்தான் எனக்கு அனுப்பி வைத்தார்!

இப்படிக்கு,
ஏழை பொன்னன்."



செட்டியார் (மோட்டார் ஓட்டி வேலைக்கு வந்தவரிடம்) — இதற்கு முன்னால் நீர் எங்கே வேலை செய்திருக்கிறீர்?

மோட்டார் ஓட்டி:— ராணுவத்தில் லாரி ஓட்டியிருக்கிறேன்.

செட்டியார்:— அப்படியானால் வேண்டாம்! நான் அடிக்கடி கோர்ட்டுக்குப் போகமுடியாது!

—என். வி. என்.

# துப்பாக்கி முனையில்

எம்., சேஷாத்ரி

ருஷ்யக் கிராமங்களுக்குள் பலவிதத்திலும் சிறப்புற்று விளங்கியது சோவோசெல்ஸ். போர்முனையில் தாய்நாட்டின் விடுதலைக்காகப் போரிடும் ருஷ்ய வீரர்களுக்கு உணவு முதலிய மூலப்பொருள்கள் அக்கிராமத்திலிருந்துதான் அதிகமாகச் செல்லும். அன்று கிராம மக்கள் சுறுசுறுப்புடன் தங்கள் வேலையில் ஈடுபட்டிருந்தனர். உற்சாகத்துடனும், விடா முயற்சியுடனும் வேலை செய்து கொண்டிருந்த கிராம மக்கள் பகல் இரண்டு மணிக்குச் சற்றுக் கண்ணயர்ந்தார்கள். வருங்கால ருஷ்யாவை அவர்களுடைய கனவுக் கண்கள் கண்டு களித்துக் கொண்டிருந்தன. சிறிது நேரத்தில் டாங்கிகள், லாரிகள் இவைகளுடன் ஜெர்மானியர் கிராமத்தை வளைத்துக் கொண்டனர். கிராமத்தினர் அவர்கள் கொடுமைக்கு ஆளாக வேண்டியிருந்தது. கிராமக் கூட்டுறவுப் பண்ணையின் தலைவன் மைகல் பிராங்கோ எப்படியோ ஜெர்மானியர்களுக்குக் 'கடுக்கா' கொடுத்து விட்டு ருஷ்யக் கொரில்லாப் படைகளுடன் சேர்ந்து கொண்டான். பிடித்தது சனியன், அவன் மனைவி ஆல்காவிற்கும், அவன் மகள் மேனியாவுக்கும்!

கிராமத்துக் கோடியில் அடர்ந்த மரங்களுக்கு மத்தியில் சிறு கூட்டம். "தோழர்களே! நமக்குச் சோதனை காலம் ஆரம்பமாகி விட்டது. நாம் இச்சமயம் மனந்தளரக் கூடாது. கண்கூடாக எதிரி செய்யும் காரியங்களை நாம் பார்த்துக் கொண்டிருக்கிறோம். இன்றுதான் பல நூற்றாண்டுகளுக்குப் பின் மனிதன் மனிதனைச் சாப்பிடும் சம்பவம் தோன்றியிருக்கிறது. நிலவளத்திலும் நீர்வளத்திலும் சிறந்த இக்கிராமம் இன்று அந்தப் பேயர்களின் ஆசை யாகத்துக்கு இரையாவதைக் கண்டு நம்மால் சும்மா இருக்க முடியுமா? அப்படி உங்களில் எவரேனும் எதிரிகள் கையில் சிக்கினாலும், மற்றவர்களைக் காட்டிக் கொடுக்கக் கூடாது. அப்படிச் செய்வதைவிட அவன் எதிரியின் குண்டுக்கு இரையாவது மேல்! புரட்சி வாழ்க!" என்று உணர்ச்சி ததும்பப் பேசிக் கொண்டிருந்தாள் ஆல்கா. மன உறுதியுடனும் கட்டுப்பாட்டுடனும் எல்லோரும் வெளியேறினர். கூட்டம் கலைந்தது.

★

குடிசைக்குள் நுழைந்தாள் ஆல்கா. கட்டிலில் சுரத்துடன் படுத்துக் கொண்டிருந்த தன் மகள் மேனியாவைத் தாயன்புடன் பார்த்தாள். சுரம் சற்றுக் குறைந்திருந்தது. அடுப்பில் வைத்திருக்கும் கஞ்சியை எடுத்து வர சமையலறைக்குள் சென்றாள். அடுப்பின் மேலிருந்த பாத்திரத்தை அவசரமாக எடுக்கச் சென்றவள் திடுக்கிட்டு நின்றாள். பாத்திரத்தில் பால் இல்லை. பாழும் பூனையைச் சபித்துக்கொண்டே திரும்பினாள். எதிரிலுள்ள கவாக்ஷத்தில் ஒரு காவிப் பூனை உருமிற்று.

"யார் நீ?" என்றாள் ஆத்திரத்துடன்.

"நான் நாஜி ஒற்றர் படை வீரன். நீ செய்யும் காரியங்களை யெல்லாம் கவனித்து வருகிறேன்."

"ஏன்? உங்கள் அடக்கு முறை அதிகாரத்தில் எங்கள் தேச மக்களுடன் பேசும் உரிமைகூட எனக்குக் கிடையாதோ?"

"அடிமைக்கு அரசியல் விஷயம் தெரியக் கூடாது. தெரிந்தாலும் பேசக்கூடாது. இது யுத்தகால அவசரச் சட்டம். வா, என்னுடன்."

"சுரத்துடன் படுத்திருக்கும் என் பெண் மேனியா?"

"அவள் இனி நாஜிக் குழந்தை!"

அவ்வளவுதான்; ஆல்கா ஒற்றர் படைக் காரியாலயத்திற்குள் இழுத்துச் செல்லப்பட்டாள்.

"மார்ஷல்! இவள்தான் கூட்டுறவுப் பண்ணைத் தலைவன் மைகலின் மனைவி ஆல்கா. ருஷ்யக் கொரில்லாப் படையுடன் மக்களைச் சேருமாறு புரட்சி செய்கிறாள். உங்கள் உத்தரவுக்குக் காத்திருக்கிறேன்!" என்றான் ஒற்றன்.

"வான்ட்ராப்! நீ போ. மணி அடித்த பின் வா!" என்று வீரனுக்கு உத்தரவிட்டு விட்டு, ஆல்காவைப் பார்த்தான் மார்ஷல்.

"ஆல்கா! உட்கார். நீ செய்திருக்கும் குற்றத்தின் பொறுப்பை உணர்கிறாயா?"

“குற்றமா? நான் செய்ததா? கள்ளங் கபடமற்ற மக்கள் வஞ்சகப் பேய்களின் சூழ்ச்சிக்குப் பலியாகக் கூடாதென்று சொல்வது குற்றமா? அல்லது உண்ண உணவும், உடுக்க உடையுமின்றி தவிக்கும் மக்களுக்கு அவைகளை நியாயமான முறையில் பெறும் வழியைச் சொல்லிக் கொடுப்பது குற்றமா?” என்றாள் ஆல்கா.

“என்ன துணிச்சல்!” என்று வியந்தான் மார்ஷல்.

“உரிமையைக் கேட்பது துணிச்சலா, மார்ஷல்?”

“உனக்கு என்ன தண்டனை விதிக்கப் போகிறேன், தெரியுமா?”

“ஆகா! தெரியும். நடுத்தெருவில் நிற்கவைத்துச் சுடப் போகிறீர்கள்! ஆனால் ஒன்று மாத்திரம் நீங்கள் ஞாபகம் வையுங்கள். இன்று இந்த ஆல்காவைச் சுடலாம்; நாளை மற்றொரு ஆல்காவைச் சுடலாம்; ஆனால் எல்லா ருஷ்ய ஆல்காக்களையும் சுட்டுத்தள்ள முடியாது!”

“ஏன் முடியாது? உன் மூலமாக அவர்களையும் நிர்மூலம் செய்துவிடுவோம்!”

“காட்டிக் கொடுக்கும் புத்தியை எங்கள் ரத்தத்தில் அணுவளவும் காண முடியாது!”

“ஆல்கா! நீ உன் கடமையை எவ்விதம் நிறைவேற்றுகிறாயோ, அவ்விதமே நானும் என் பணியைச் செய்ய வேண்டுமல்லவா?”

“அதற்காக என்னை என்ன செய்யச் சொல்கிறீர்?”

“உன் கணவன் ஒளிந்திருக்கும் இடத்தையும், கொரில்லாப் படைகளின் போக்குவரத்துகளைப் பற்றியும் எனக்குத் தெரிவிக்க வேண்டும்.”

“சொல்ல மறுத்தால்......?”

“மறுத்தால் அதன் விளைவுதான் உனக்குத் தெரியுமே!”

“சுட்டுவிடுவீர்கள்; அவ்வளவுதானே?”

“இல்லை; காய்ச்சலால் தவிக்கும் உன் பெண்......?”

“ஆம், அவளை என்ன செய்வீர்கள்?”

“பிறகு சொல்கிறேன். நீ சொல்; அவர்கள் எங்கே?”

மௌனம்.

“மீண்டும் பிடிவாதம் செய்கிறாய். அவர்களைப் பற்றிய விவரம் ஒன்றையும் நீ சொல்லாவிட்டால், முதலில் உன் பெண்; பின்னர், நீ; பின்பு உன் கிராம மக்கள்;



இப்படியே ஒவ்வொருவராக நிர்மூலம் செய்யப்படுவீர்கள்!”

“போதும், நிறுத்து. இந்த விதமான பயமுறுத்தல்களுக்கு அஞ்சி எங்கள் நாட்டையும், நாட்டு மக்களையும் காட்டிக் கொடுக்க விரும்பும் துரோகி நான் அல்ல.”

“ஆனால் நீ சொல்லமாட்டாயோ?”

“முடியாது!”

“சார்ஜண்ட் மோட்டன்! இவளைக் கொண்டுபோய்ச் சிறையில் வையுங்கள். இன்று மாலை இவள் உயிர் பரிசுத்த தேவனை அடையட்டும்” என்று படைத்த கடவுளைக் கூடப் பரிகசித்தான் மார்ஷல் போட்டன்.

★

மாலை வேளை. சிறையில் அடைக்கப்பட்ட ஆல்காவின் மன உறுதி அவளுடைய சிங்காரமான வதனத்தில் பிரதிபலித்தது. அவளுடைய தியாகத்தின் உயர்வைக் கணக்கிட இவ்வுலகில் அளவு கோல் ஒன்றுமே இல்லை. தாய்நாட்டிற்குச் செய்யவேண்டிய திருப்பணியின் முன் பெற்ற பாசம்கூட தலை குனிய வேண்டியதாயிற்று.

வீர ருஷ்யாவின் எதிர்கால வாழ்வைப் பற்றி நினைத்துக் கொண்டிட சிந்தனைக்

குதிரையைக் 'காலப்'பில் தட்டிவிட்டான் ஆல்கா. 'காக்' 'காக்' என்ற நாஜிச் சோல்ஜர்களின் பூட்ஸ்ச் சத்தம் அவன் கனவைக் கலைத்தது.



"ஆல்கா!" என்று மார்ஷல் அவளைக் கூப்பிட்ட பின்தான் அவள் தன் நிலையை உணர்ந்தாள்.

"கடைசி முறையாகக் கேட்கிறேன், சொல்கிறாயா என்ன?"

"என் பதிலைத்தான் உங்களுக்குச் சொல்லி விட்டேனே."

"தீர்மானமாகவா?"

"ஆம்"

அவள் குரலில் நடுக்கம் காணப்படவில்லை.

"இழுத்துச் செல், கழுதையை! பார்க் ரோடிலிருக்கும் மேடையில், நாஜிச் சோல்ஜரின் துப்பாக்கிக் குண்டு அவள் ரத்தத்தை ருசி பார்க்கட்டும்!" என்று கடுமையான குரலில் உத்தரவிட்டான் மார்ஷல்.

கொஞ்ச நேரத்தில் பார்க் ரோடிலிருக்கும் சுவரில் ஒட்டப்பட்ட விளம்பரத்தை ஒருவன் படித்துக் கொண்டிருந்தான். அவனும் நமக்கு அறிமுகமானவனே. அவன் தான் ஆல்காவின் புருஷன் மைகல்.

## எச்சரிக்கை!

கொரில்லாப் படைகளுடன் சேர்ந்து கொண்டு எங்களுக்குத் துரோகம் நினைப்பவர்களையும், நாங்கள் சொல்லும் வார்த்தையைக் கேளாதவர்களையும், அவர்களுடைய வயது, இனம் முதலியவைகளைப் பாராமலேயே சுட்டுத் தள்ளுவோம். முதன் முதலாக எங்களுக்குத் துரோகம் செய்த ஆல்கா என்ற பெண் இன்னும் சிறிது நேரத்தில் பார்க் ரோடில் சுடப்படுவாள். ருஷ்ய மக்களே, ஜாக்கிரதை!

மார்ஷல் போட்பன்,
நாஜி ஒற்றர் படைத் தலைவன்.

★

"ஆல்கா! உன் ஆயுளின் கடைசி நேரத்திலாவது நீ வழிக்கு வர மாட்டாயா?"

"மாட்டேன்! முடிந்தால் என் குழந்தை மேனியாவை எனக்குக் காட்டுவீர்களா?"

"அது முடியாத காரியம்."

"ஏன்?"

"உன் பெண் இறந்துவிட்டாள்!"

"ஆ! நிஜமாகவா?" என்று அலறினாள் ஆல்கா.

இந்தச் சமயத்தில் எதிர்பாராத விதமாக அங்கு வந்த ஆல்காவின் கணவனான மைகல், "ஆம், ஆல்கா! உண்மையாகவே நம் கண்மணி மேனியா இறந்து விட்டாள். அதாவது, இந்தப் பேயர்களால் பட்டினி போடப்பட்டுக் கொலை செய்யப்பட்டாள்" என்று சொன்னான்.

அவன் கையிலும் விலங்குகள் மாட்டப் பட்டிருந்தன.

பெண் இறந்த துக்கத்தாலும், கணவன் கைதியாக்கப்பட்ட ஏக்கத்தாலும் அவள் மனம் இரும்பிலும் கடினமாக மாறியது.

"பேயர்களே! ஒரு சிறு குழந்தையைப் பட்டினி போட்டுக் கொல்ல உங்களுக்கு வெட்கமாக இல்லையா?" என்று காரி உமிழ்ந்தாள்.

எதிரில் நின்று கொண்டிருந்த நாஜிச் சோல்ஜர்கள் எச்சிலைத் துடைத்துக் கொள்ள முயன்றபோது, எதிர்பாராத விதமாக அந்தச் சோல்ஜர்களில் ஒருவன், ஆல்காவையும், அவள் கணவனையும் கண் மூடித் திறக்குமுன் சுட்டுவிட்டான்!

கடைசியில் என்ன? இருவரும் என்றாலும் ருஷ்ய மக்களால் பூஜிக்கத் தக்கவர்களாகி விட்டார்கள்!

[ஒரு ருஷ்யக் கதையைத் தழுவியது.]

# கடன் தீர்ந்தது!

நாடோடி

அப்பாடா!... கடன் தீர்ந்தது!... இதனால் எனக்கு ஏற்பட்ட சந்தோஷத்தை எப்படி விவரிப்பேன்! காணாமற்போன சேவகன் காசு கண்ணில் பட்டது போலவும், ஏறப்போன ரயில் வண்டியில் இடம் கிடைத்தது போலவும் ஆனந்தப் பட்டேன்.

வீணாகக் கடன் வாங்குவானேன்? பிறகு கடன் தீர்ந்தது என்று களிக்கூத் தாடுவானேன் என்று நீங்கள் கேட்கலாம்.

கடன் நான் வாங்கவில்லை, ஐயா! நான் வாங்கவில்லை. நான் கொடுத்த கடன் இத்தனை நாளைக்குப் பிறகு திருப்பிவந்தது. அதுதான் இப்படிச் சந்தோஷப் படுகிறேன்.

"யாராவது கொடுத்த கடன் திரும்பி வந்ததற்கு இப்படிச் சந்தோஷப் படுவார்களா?" என்று கேட்கிறீர்களோ?

என் நண்பர் (என் நண்பரா அவர்?) அண்ணாமுத்துவை உங்களுக்குத் தெரியாது. இல்லை, தெரிந்திருக்கலாம். ஆனால் என்னைப்போல் கடன் கொடுத்திருக்க மாட்டீர்கள்.

ஊஹூம். அண்ணாமுத்து அத்தனை அசடு அல்லவே! தமக்குத் தெரிந்த யாரிடமிருந்தும் அவர் கடன் வாங்காமல் விட மாட்டாரே? ஆகவே உங்களுக்கு அவரைத் தெரியாது என்றுதான் வைத்துக்கொள்ள வேண்டும்.

அதுதான் இப்படிக் கேட்கிறீர்கள். இல்லாவிடில் நீங்கள் எனக்குமேல் தலைகால் தெரியாமல் குதித்துக் கொண்டிருப்பீர்களே!

அண்ணாமுத்துவிடம் நான் கடன் கொடுத்த மறுநாளே என் நண்பர் ஒருவர் சொன்னார்:

"அண்ணாமுத்துவிடம் கடன் கொடுத்து விட்டீர்களே, ஐயா! அந்த மனுஷன் லேசில் திருப்பித் தர மாட்டாரே! ஒரு அரை டஜன் செருப்பாவது பிரயோகப்படுத்தினால்தான்—"



கடன் கொடுக்கும் முன்

"என்ன ஐயா, செருப்பை எடுத்து அடிக்கச் சொல்கிறீர்கள்? அவர் அப்படியே நம்மைத் திருப்பி வாங்கிவிட்டால்?"

"என்ன ஐயா, பயித்தியக்காரராக இருக்கிறீர்? அவரையா நான் அடிக்கச் சொன்னேன்? பணம் திருப்பி வாங்குவதற்காக அடிக்கடி அலைய வேண்டி நேரிடும், அதனால் அரை டஜன் செருப்பாவது தேயுமே என்று சொல்லவந்தால்—" என்று வாக்கியத்தை முடிக்காமலேயே நண்பர் போய்விட்டார்.

இவர் அண்ணாமுத்துவைப் பற்றி எவ்வளவு தவறுதலான அபிப்பிராயம் கொண்டிருக்கிறார் என்பது எனக்கு இப்பொழுது தான் தெரிந்தது. அரை டஜன் செருப்பு தேயும் என்றல்லவா சொன்னார்? அத்தனையும் பொய்.

நான் நேற்றுக் கணக்குப் பார்த்ததில் ஒரு டஜன் செருப்புகள் தேய்ந்திருக்கின்றன என்று தெரிந்தது.

ஆம்; அண்ணாமுத்துவிடமிருந்து கொடுத்த பணத்தைத் திருப்பி வாங்குவதற்காக அத்தனை நடைகள் நடந்தேன்.

ஒவ்வொரு நடையும் அண்ணாமுத்து 'வீட்டில் இருக்க மாட்டார்' — அதாவது 'வீட்டில் இல்லை' என்றுதான் பதில் வரும். ஆனால் இந்தப் பதிலைப் பொருட்படுத்தாமல் திண்ணையிலேயே சத்தியாக்கிரகம் செய்தால் கட்டாயம் அவரைச் சந்தித்து விடலாம்.

வீட்டிற்குள் இருக்கிறவர் கட்டாயம் ஏதாவது ஒரு காரியத்துக்காக வெளியே வந்துதானே ஆகவேண்டும்? இல்லை, அப்படித்தான் வெளியில் போயிருந்தார் — வீட்டுக்காரர்கள் "இல்லை" யென்று சொல்லும் தகவல் நடுவில் எப்பொழுதாவது உண்மையாகவும் இருக்கலாம் அல்லவா? — கட்டாயம் வீடு திரும்பித்தானே ஆகவேண்டும்?

ஆகவே நான் அண்ணாமுத்துவைத் தேடிக்கொண்டு போகும் ஒவ்வொரு சமயமும்

அவர் தரிசனம் கிடைக்க ஒரு மணி நேரமாவது ஆகும்.

கடைசியில் அண்ணாமுத்து வெளியில் வருவார். வரும்போதே தம் முப்பத்திரண்டு பற்களையும் காட்டிக்கொண்டு தான் வருவார்.

"என்ன ஐயா! காப்பி சாப்பிட்டாச்சா! காப்பி வாங்கிக்கொண்டு வரச் சொல்லட்டுமா?" என்பார்.

அவ்வளவுதான்! "காப்பி" என்ற இந்தச் சப்தம் காதில் விழுந்ததுமே எனக்கு அண்ணாமுத்துவின் மேல் இருந்த கோபமெல்லாம் பறந்தோடிப் போய்விடும். பாவம், நல்ல மனுஷன், இவரிடம் பணத்தை நல்ல முறையில்தான் கேட்க வேண்டும் என்று தீர்மானித்து விடுவேன்.



கடன் கொடுத்த பின்

அத்தனைக்கும் அத்தனை நாளாக அலைக் கழித்தது. பணம் கொடாமல் ஏமாற்றிக் கொண்டு வருவதற்காக அண்ணாமுத்துவை எப்படியெல்லாம் வையவேண்டும் என்று அன்று காலையில்தான் ஒத்திகை செய்து பார்த்திருப்பேன். எந்தெந்த வசவுகளை உபயோகப்படுத்தினால் கை கலக்கும்படியான நிலைமை ஏற்படாது, எந்தெந்த வசவுகளை உபயோகப்படுத்தினால் நிலைமை முற்றி விடும் என்றெல்லாம் நினைத்துப் பார்த்திருப்பேன். அண்ணாமுத்து எத்தனை சாமர்த்தியமாகப் பேசினாலும் ஏமாந்து விடுவதில்லை, கண்டிப்பாகவே பேசித் தீர்த்து விடுவது என்று கங்கணம் கட்டிக் கொண்டிருப்பேன்.

ஆனால் என்ன பிரயோஜனம்? அந்தக் 'காப்பி' என்ற வார்த்தை என்னை அப்படியே நல்லவனாக மாற்றித் தொலைத்து விடுகிறதே, என்ன பண்ணலாம்!

ஆகவே அவரிடம் சுமுகமாகவே பேச ஆரம்பிப்பேன. "என்ன அண்ணாமுத்து! உங்கள் வியாபாரம் எல்லாம் எப்படி நடக்கிறது?" என்று வெகு அக்கரையாக விசாரிக்க ஆரம்பிப்பேன். (அவர் வியாபாரம் எப்படி நாசமாகப் போய்த் தொலைந்தால் என்ன? இந்தப் பணத்துக்காக இப்படியெல்லாம் கேட்டுத் தொலைக்க வேண்டியிருக்கிறது!) இன்னும் அவருடன் சேர்ந்து கொண்டு, அவருக்குப் பிடிக்காதவர்களையெல்லாம் நானும் ஒரு பாட்டம் வைவேன்.

நாங்கள் இருவரும் பேசும் முக்கால்வாசி நேரம் இதுமாதிரிப் பேச்சுக்களிலேயே போய்விடுமாகையால் பண விஷயத்தைக் கடைசியில் தான் பிரஸ்தாபிக்க முடியும்.

கொடுத்த கடனைத் திருப்பிக் கேட்பதில் உள்ள இன்னொரு கஷ்டத்தைப் பாருங்கள்.

இதுவரை எத்தனையோ பேரைப் பார்த்திருக்கிறேன். நான் கடன் வாங்கி அலைய விட்டவர்களையும் கவனித்திருக்கிறேன். ஒருவராவது, "கொடுத்த பணம் என்னுடையது. ஆகவே அதைத் திருப்பிக் கொடு" என்று அதிகாரமாகக் கேட்பதில்லை. ஏதோ யாசகத்துக்கு வந்தவர்கள்போல், "எனக்கு இந்தச் செலவு இருக்கிறது, எனக்கு அந்தச் செலவு இருக்கிறது. தயிர்க்காரிக்குப் பாக்கியிருக்கிறது, பால்காரனுக்குப் பாக்கியிருக்கிறது" என்று பஞ்சப் பாட்டுத்தான் பாடுகிறார்கள்.

"ஊரோடு ஒத்து வாழ்" என்னும் வாக்கியத்தை நான் வேறு இனங்களில் கடைப் பிடிக்காவிட்டாலும் இது விஷயத்தில் கடைப் பிடிக்கத்தான் வேண்டியிருக்கிறது.

அண்ணாமுத்துவிடம் நானும் இதே பஞ்சப் பாட்டைத்தான் பாடுவேன்.

வீட்டுக்காரனுக்கு ஆறுமாத வாடகை பாக்கி என்று அழுவேன்.

(இது விஷயம் என் வீட்டுக்காரர் காதில் விழுந்தால் அவர் இடி இடி என்று சிரிப்பார். ஆறுமாத வாடகையைப் பாக்கி விட்டு வைக்க நான் என்ன பயித்தியக்காரனா என்று கேட்பார்.)

வைத்தியருக்குப் பணம் பாக்கி என்பேன். பாட்டியார் செத்துவிட்ட பத்தாவது நாள் என்பேன்.

ஆனால் இத்தனைக்கும் அண்ணாமுத்து மசியமாட்டார். என்னை அப்படியே சொக்குப் பொடி போட்டு மசிய வைக்க ஒரு நல்ல வழி கண்டுபிடித்து வைத்திருக்கிறார்.

"என்ன ஐயா! கதை விடுகிறீர்? உமக்கு எங்கே ஐயா வந்தது பணக் கஷ்டம்? உமக்குத்தான் மாதம் பிறந்தால் சொளை சொளையாகச் சம்பளம் கிடைத்து விடுகிறதே?" என்று நான் வாங்கும் சம்பளத்தை நான்கு மடங்கு மிகைப்படுத்திக் கூறுவார்.

உங்களைத்தான் கேட்கிறேன். நான்கு பேருக்கு நடுவில் ஒருவர் நம் சம்பளத்தை இப்படி அதிகப்படியாகச் சொல்லும்போது "எனக்கு அத்தனை சம்பளம் இல்லை. குறைச்சல்தான்" என்று சொல்ல மனம் வருமா? அத்தனை சம்பளம் வாங்குகிறவர்கள் போலவும், உண்மையில் நமக்குப் பணக் கவலையே கிடையாது போலவும் தானே நடிக்கத் தோன்றும்?

ஆகவே நானும் அப்படியேதான் நடிப்பேன். பணத்தைப் பற்றி அதிகம் சர்ச்சிக்காமல் வீட்டுக்குத் திரும்பி விடுவேன்.

'கடன் கேட்காமல் கெட்டது, கிலம் பார்க்காமல் கெட்டது' என்று வசனம் சொல்வார்கள். அந்த வசனம் எனக்கும் தெரியும். இருந்தும் அதற்காக அண்ணாமுத்துவை அடிக்கடி கேட்க முடிகிறதா? முதலில் காரியாலய வேலையை யெல்லாம் கெடுத்துக்கொண்டு, அவரைப் பார்ப்பதற்கென்றே மூன்று மணி நேரம் ஒதுக்கி வைக்க வேண்டியிருக்கிறது.

இரண்டாவது, அடிக்கடி இதே பண விஷயமாகவே போய்ப் பார்த்தால் சள்ளென்று விழுவாரோ என்று பயமாக இருக்கிறது.

இதற்காக நான் அண்ணாமுத்துவை வேறு காரியம் இருந்தால்கூடப் பார்க்கப் போவதில்லை. பணம் கேட்கத்தான் வந்திருக்கிறேனோ என்று நினைத்துக்கொண்டு விட்டால் என்ன பண்ணுவது என்று பயம்! தெருவில்கூடத் தப்பித்தவறி எதிரே தென்பட்டால் இதேமாதிரி நினைத்துக் கொண்டு விடப்போகிறாரோ என்று பயந்துகொண்டு தெருவில் பார்த்துத்தான் நடப்பேன்.

சில சமயங்களில் இவருக்குப் பயந்து கொண்டு பக்கத்தில் உள்ள ஏ. ஆர். பி. ஷெல்டருக்குள் நுழைந்திருக்கிறேன். அண்ணாமுத்து அப்பால் போகும் வரை, ஜப்பான் எதிரியின் குண்டுகளிடமிருந்து நம்மைக் காப்பாற்றுவதற்காகக் கட்டப்பட்ட ஏ. ஆர். பி. ஷெல்டர்கள், இப்பொழுது அண்ணாமுத்துவிடமிருந்து என்னைக் காப்பாற்றும் விந்தையைக் குறித்து வியந்து கொண்டே நிற்பேன்.

இப்பொழுது ஏ. ஆர். பி. ஷெல்டர்கள் இடிக்கப்பட்டுவிட்டதால் நான் நேர் வழியை விட்டுச் சந்து பொந்துகளில் புகுந்து, பிறகு திரும்பிவர வழி தெரியாமல் திண்டாட வேண்டியிருக்கிறது. ஆனால் எத்தனை நாளைக்குத்தான் இந்த மாதிரி கஷ்டப்படுவது?

ஒரு நாள் எனக்குக் கோபம் தாங்கவில்லை. உடனே புறப்பட்டேன். விடு, விடென்று நடந்தேன். பக்கத்தில் இருந்த பிள்ளையார் கோவிலுக்குள் நுழைந்தேன்.

நான் இப்படிக் கஷ்டப்படுவதைக் குந்தம் பிள்ளையாரட்டம் பார்த்துக் கொண்டிருக்கிறீர்களே என்று பிள்ளையாரை நொந்து கொண்டேன்.

அடுத்த நாளே பிள்ளையார் ஒரு நண்பர் உருவத்தில் வந்து சேர்ந்தார். நான் அண்ணாமுத்துவை அடிக்கடி பார்க்கப் போவதைக் கவனித்துக்கொண்டிருந்த ஒரு நண்பர், தாம் அண்ணாமுத்துவுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தை என்னிடம் கொடுத்துக் கொடுக்கச் சொன்னார். அந்தப் பணத்தை நானே வைத்துக்கொண்டு 'கடன் தீர்ந்தது' என்று அண்ணாமுத்துவுக்குக் கடிதம் எழுதி விட்டேன். அப்பாடா! கடன் தீர்ந்தது!



# இது என்ன வார்த்தை



ஆரஞ்சு என்ற வார்த்தை தமிழில் ஓர் பழத்தின் பெயர். சமஸ்கிருதத்தில் 'நாரங்க' என்ற பதம் ஹிந்தியில் 'நாரங்கி' என வழங்கப்படுகிறது. ஆங்கிலேயர் இதை முதலில் பார்த்தபோது, ஆங்கில பாஷையில் 'A norange' (ஏ நாரங்கி, அதாவது ஒரு நாரங்கி) என்றுதான் சொன்னார்கள். நாளடைவில் இது 'An orange' (ஆன் ஆரஞ்ஜ், அதாவது ஒரு ஆரஞ்ஜ்) என மாறி கழந்த 'ஆரஞ்சு' என்ற ரூபத்தில் அளிக்கப்பட்டது.

'நாரங்க'தான் 'நாரங்காய்' ஆகி, பிறகு 'நார்த்தங்காய்' எனத் திரிபு ஆகிவிட்டது. இங்கிலாந்துக்குப் போய்த் திரும்புவதற்குள் உரு மாறி விட்டது. சீமைக்குப் போயும் மாறுதலடையாமல் திரும்புவது அபூர்வம்தானே?

—கே. எஸ். எஸ்.




## கல்யாண காலத்திற் கேற்ற புடவைகள்

கண்ணைக் கவரும் நூதன நாகரீக நிறங்களில் ஏராளமாக வந்து குவிந்துள்ளன.

உங்களுக்குப் பிடித்தமானதைப் பொறுக்கி யெடுத்துக் கொள்ளுங்கள்



# பாபுலர் சுதேசி ஸ்டோர்ஸ்

ரோடு,

திருவல்லிக்கேணி :: மதராஸ்.

போன் : 86226

---

## உத்திரவாதமுள்ள ஆபரணங்களுக்கும் வைரங்களுக்கும் அசல் வெள்ளி சாமான்களுக்கும்






# P.A. ராஜு செட்டியார் & பிரதர்

கடை வீதி. "ஸ்வர்ண மாளிகை" கோயமுத்தூர்.

தந்தி. "ராஜு"..... தபால் பெட்டி. 139. ........போன். 218.A

எந்த உணவுப் பொருள்களை நீ அதிகம் விரும்புகிறாயோ!

# அவற்றினால் அதிக பலத்தைத் திரட்ட முயற்சிக்கவும்!








ஒவ்வொருவரும் [illegible] பதார்த்தங்கள் ஊக்கமளிக்கக் கூடியவை என்பதை அறிந்திருக்க வேண்டும். டால்டா "குக் புக்" (ஆங்கிலத்தில் மட்டும் எழுதியுள்ளது) உணவுப்பொருள்களின் தராதரத்தைப் பற்றியும், 150 இந்திய ஆகார திட்டங்களைப்பற்றியும் விவரித்திருக்கிறது. 'உங்கள் வீட்டிலும் ஒரு பிரதி இருக்க வேண்டியது அவசியம். Dept. C133 P.O. Box No. 353 Bombay என்ற விலாசத்திற்கு 4 அணா ஸ்டாம்பு அனுப்புங்கள்

விருப்பத்துடன் நீங்கள் சாப்பிடும் உணவுப்பொருள்களை அதிக ஊக்கந் தரக்கூடியவைகளாகச் செய்யுங்கள். நமக்குப் பிரியப்பட்ட சில உணவுப் பொருள்கள் அதிக நன்மை அளிப்பதில்லை என்று உங்களுக்குத் தெரியுமா? அவைகள் பசியைத் தணிக்கின்றன. ஆனால் சிறிது ஊக்க மட்டும் அளிக்கின்றன—தேவையான அளவு ஊக்கத்தைக் கொடுப்பதில்லை. இது ஒரு திடுக்கிடக்கூடிய யோசனைதான். ஆரோக்கியம், சந்தோஷம், திறமை—இவைகளெல்லாம் ஊக்கத்தை ஆதாரமாகக் கொண்டுள்ளன. சாப்பாடு நம் தேவைக்கு வேண்டிய ஊக்கத்தைக் கொடுக்காவிட்டால் ஏற்படும் தீமைகள் பல. எல்லா உணவுப் பொருள்களும் சிறிதளவு ஊக்கத்தை அளிக்கின்றன. ஆனால் தினசரி சாப்பிடும் சில உணவுப்பதார்த்தங்கள் சொற்ப ஊக்கமளிக்கக் கூடியவை. இம்மாதிரியான சாப்பாட்டுக்கு ஊக்கத்தைக் கொடுக்கவேண்டுமானால் அதிக ஊக்கமளிக்கக் கூடிய பதார்த்தங்களைச் சேர்க்கவேண்டும். வைடமின் நிறைந்த டால்டாவினால் சமைப்பது அனுகூலத்தைக் கொடுக்கிறது. இயற்கையளிக்கும் ஊக்கத்தைக்கொடுக்கக்கூடிய சத்துப் பொருள்களை டால்டா கொடுக்கிறது. எல்லா உணவுப்பதார்த்தங்களையும் டால்டாவினால் சமையல் செய்வது நலம்.






வைடமின் நிறைந்த **டால்டா** ஊக்கமளிக்கிறது.






வினோலியா உபயோகித்து ஸ்நானம் செய்தால் குளிர்ச்சி உண்டாகும் போது நீங்கள் ஏன் வெப்பத்தினால் கஷ்டப்பட வேண்டும். இந்த சோப்பின் வெண்ணிறம் வாய்ந்த நுரை உங்களை சுத்தமாக்கும் பொழுது ஏன் வியர்வையுடன் இருக்கவேண்டும். வினோலியா சோப்பின் வாசனை சுறுசுறுப்பையும், உத்ஸாகத்தையும் உண்டுபண்ணி, மனதிற்கு சுகத்தையும் அளிக்கிறது.

# வினோலியா ஒயிட் ரோஸ் ஸோப்பு




VINOLIA CO. LIMITED, LONDON, ENGLAND



## உங்கள் மனதிற்குகந்தது

டிலக்ஸ் டெனார் சிகரெட்டின் நறு மணத்தை நீங்கள் மிகவும் விரும்பு வீர்கள். உத்தரவாதமுள்ள 100% பொருக்கின வர்ஜீனியா புகையிலை தான் டெனார் செய்ய உபயோகிக்கப் படுகிறது. இதுவே எல்லோரும் விரும்பி ரஸிப்பதற்கும், தொண்டைக்கு கெடுதல் செய்யா திருப் பதற்கும் காரணம். மனோ ரம்மிய மான இந்த சிகரெட்டை இன்றே வாங்கி நீங்கள் உபயோகியுங்கள்

டி லக்ஸ் டெனார் சிகரெட்டு
ஜேம்ஸ் கார்ல்டன் லிட், லண்டன்

**tenor**

**is truly a de Luxe Cigarette**

JAMES CARLTON LTD. LONDON.

Regd No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press. 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.